# ஸ்ரீ அபிராமி அந்தாதி

[மூலமும் உரையும்]






தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

சென்னை - 17

சிவமயம்

ஸ்ரீ அபிராமி பட்டர் அருளிய

# ஸ்ரீ அபிராமி அந்தாதி

(மூலமும் உரையும்)




பதிப்பகத்தார் :

## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

சென்னை - 600017 : : திருச்சி-620002

சென்னையில் லிப்கோ ஸ்டாகிஸ்டுகள் :

எம். தாமோதரம் அண்டு கம்பெனி,

108, கார்ப்பொரேஷன் பழக் கடை, சென்னை-600001.

1974 [விலை ரூ. 2

முதற்பதிப்பு : 1974

# பதிப்பகத்தாரின் பணிவுரை

ஸ்ரீ அபிராமி அம்மையின் திருக்கடைக்கண் நோக்கம் அருளாத பொருளில்லே. தினந்தோறும் அபிராமி பட்டர் அருளிய அபிராமி அந்தாதியை அன்புடன் பாராயணம் செய்யும் அடியார் பலர் உளர்; பாராயணம் செய்வதன் பலனேக் கண்கூடாகக் கண்டவரும் பலர். ஆகவே, யாவருக்கும் பயன்படும் வண்ணம் இந்நூலேத் தேவையான அளவு பதம் பிரித்துப் பதிப்பிக்கவேண்டும் என்பது அடியார் பலர் விழைவு. அவ்விழைவினே நிறைவேற்று முகத்தானும் ஒவ்வொரு பாசுரத்திற்கும் உள்ள தெய்வத் தன்மையை வெளிப்படுத்து முகத்தானும் இப்போது இப் பதிப்பு உரையுடன் வெளியிடப்படுகிறது. அன்பர்கள் இந்நூலே அனுதினமும் பாராயணம் செய்து கோரிய இன்பங்களேப் பெற்றுப் பெருவாழ்வு வாழ்கவெனத் திருவருளே இறைஞ்சுகிறோம்.

சென்னே-600017. தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

மூவேந்தர் அச்சகம், சென்னே-600014.

# முகவுரை

" எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்." — குறள்

நினைத்தல் என்பது மனத்தின் செயல். விழித்த நிலையில் இடையீடின்றியும் உறக்க நிலையில் ஓரளவும் நினைத்தல் நிகழ்கின்றது. இந்நினைத்தலைக் கட்டுப்படுத்தி ஒன்றையே — உயர்ந்த பொருளையே — ஒருமுகமாய் முனைந்து கருத்தில் இருத்துதலைத் தியானம் என்பர். தியானத்தின் முதிர்ந்தநிலை சமாதிநிலை ஆகும். இந்நிலை கைவரப்பெற்ற பெரியார்கள் யோகிகள்; எங்கும் நிறைந்த பரம்பொருளை நெஞ்சகத்தே ஒளிவடிவாய்க் கண்டு அம் மகிழ்ச்சியிலேயே திளைத்திருப்பவர்கள். அத்தகு பெரியார்கள் உலக மக்கள் உய்யும்பொருட்டுப் பல நூல்களையும் அருளிச் செய்திருக்கிறார்கள். தாயுமானவர், பட்டினத்தார், ராமலிங்க அடிகள் முதலியோருடைய அருளிச் செயல்கள் இத்தன்மையதே. அவர்களைப் போன்றே திருக்கடவூர்வாழ் ஸ்ரீ அபிராமி அம்பிகையின் பேரருள் வெள்ளத்தில் மூழ்கி மகிழ்ந்து வேறொன்றையும் சிந்தியாது வாழ்ந்து வந்தவர் **அபிராமி பட்டர்** என்னும் அந்தணர் ஆவர்.

யோகிகள் மலபரிபாகம் உற்றவர்கள்; மோக்ஷ சாதனமானதும் மோக்ஷத்தை அளிக்கவல்லதும் ஆகிய உயரிய நூல்களை உலக நன்மையின் பொருட்டுப் பாடியருளியுள்ளார்கள். அவை யாவும் மிக உயர்ந்த நிலையான 'ஆறுறையும் கடந்து நின்ற துரியாதீத நிலையை' அடைய வழியாகவே அமைந்திருப்பன. எனினும் அவை சாதாரண மக்கள் உய்யும்பொருட்டு உலக இன்பங்களையும் நல்க வல்லன.

ஒருவன் நெடுந்தூரம் கால்நடையாகவே பயணம் செய்கிறான் என்று வைத்துக்கொள்வோம். வழியில் ஆங்காங்கே தான் கண்ட இயற்கை எழில் நலன்கள், அற்புதங்கள், இனிய செய்திகள் முதலியவற்றைத் தன் நண்பர்களும் உறவினர்களும் நேரில் காண்பதுபோலவே உணருமாறு அவன் எடுத்துக் கூறுவான் என்பதில் ஐயமில்லை. அவன் நீண்ட பயணத்தால் பெற்ற அனுபவத்தின் ஒரு துளியேனும் மற்றவர்கட்குக் கிடைக்கும். அதுபோலவே யோகிகளின் அனுபவ சாகரத்தினின்று தெறித்த துளிகளே அவர்கள் உலகிற்கு அளித்த நூல்களாகும். அழியாப் பரம்பொருளோடு ஒன்றுபடும் பொருட்டாகச் செய்யும் யோகப் பயணத்தில் இடையிடையே கண்ட பயனுறு பொருள்களை இயல்பான கருணையினால், தம்மைப் பின்பற்றி வரக் கருதும் மக்களுக்கு அடையாளக் கற்களாய் இருக்கும்வண்ணம் பதித்து

வைத்த எல்லைக் கற்களே அந்நூல்கள். பேரின்ப நிலையை எய்து தற்கு வழிகாட்டியாக விளங்கும் அவை மேற்கூறிய காரணத் தாலேயே உலக இன்பங்களையும் நல்குவனவாக உள்ளன.

ஒருவன் வாழைத் தோட்டம் போடுவதாக வைத்துக்கொள் வோம். வாழைத் தோட்டம் போடுவதன் நோக்கம் யாது? காய், பழம் ஆகிய பலன்களைப் பெறும் பொருட்டேயாகும். ஆனால் அவற்றோடு இலை, பூ, பட்டை, நார் முதலிய பயன்களும் கிடைக் கின்றன. வெறும் இலைக்காகவோ அல்லது பூவுக்காகவோ ஒருவன் வாழைத் தோட்டம் போடமாட்டான். அவனுடைய குறிக் கோள் காய் அல்லது பழம். ஆனால் அவன் குறிக்கோளை எய்து வதும் அல்லாமல் இடையே மேலும் பல பலன்களை — முதலில் அவைகளைப் பெரிய பலனாகக் கருதாவிட்டாலும் — பெறுகிறான். அதுபோலவே யோகிகள் அடையக் கருதிய பொருள் பரம்பொரு ளோடு இரண்டறக் கலந்து நிற்பதே. ஆயினும் அந்நிலையை அடைவதற்காக அவர்கள் சரியை, கிரியை முதலிய யோக நிலைகளைப் பயிலும்போது உபபலன்கள் பல விளைகின்றன. அவை சாமான்ய ஜனங்களுக்குப் பெரு நன்மை விளைப்பனவாய் உள்ளன.

முற்றும் உணர்ந்த ஞானிகள், பாமர மக்களும் தாம் பெற்ற இன்பத்தைப் பெற விழைகிறார்கள். ஆனால் உலகத் துன்பங்களில் சிக்குண்டு மனத்தை ஆண்டவன்பால் இடையறாது நிறுத்தும் வன்மை பெறாத பாமரர்கள் மெதுவாகவேனும் ஆன்மீக நிலையில் முன்னேறும்பொருட்டுச் சிறு துன்பங்கள் நீங்கிப் பெரும் பலன் பெறுமாறு தாம் யோக நெறியில் இடையிடையே கண்ட மாமருந்து களை வெளிப்படுத்தினார்கள் கைம்மாறு கருதாத பெருஞானிகள். அத்தகைய ஞானிகள் பலர் வாழ்ந்த நாடு நம் நாடு. அவர்களுள் ஒருவரே **அபிராமி பட்டர்.**

அபிராமி பட்டர் அம்பிகையின் அருள்பெற்று யோகநிலை கை கூடியவர். அம்பிகையைப் போற்றிச் செந்தமிழால் பாடல்கள் நூறு புனைந்தார். அவை யாவும் மோக்ஷ சாதனமாகவே அமைந் தவை என்றாலும் முன்னே தெரிவித்ததுபோல உலக இன்பங் களைத் தருவதாகவும் அமைந்துள்ளன. கண்ணும் கருத்தும் எட்டாப் பேரின்பப் பெருநிலையை எளிதாகக் கைகூட்டும் அருந் தமிழ்ப்பாக்கள் சிறு சிறு துன்பங்களைப் போக்கி முத்தி நெறிக்கு முதற்படியான பத்தி நெறியைக் கூட்டுவது ஒரு வியப்போ!

அப்பாடல்களில் ஒவ்வொன்றும் எத்தகைய துன்பத்தைப் போக்குவன; எத்தகைய இன்பத்தை நல்குவன என்பனவற்றை மருவறக் கற்ற பெரியார்கள் ஆராய்ந்துரைத்தபடி வெளியிடும் பேறு பெற்றுள்ளோம். ஸ்ரீ அபிராமி அம்மையின் கருணையே கருணை.

# ஸ்ரீ அபிராமி பட்டர் வரலாறு

**பொ**ன்னி நன்னதி பொய்யாது பாயும் சோழர் பெருநாடு எவ்வகை வளமும் பெற்று விளங்குவதோடு பல்வகைக் கலைகளும் இயல்பாக வளர்ந்து புகழ்பெற்ற நாடு. சைவம் தழைக்க தழைத் தோங்கிய ஞானசம்பந்தப் பெருமான் தோன்றிய நாடு இஃ தென்றால் இதன் பெருமையை எடுத்துரைக்க மொழி போதுமோ? கல்வி நீர் பாய்ச்சி அறிவு எருவிட்டுப் பத்திப் பயிர் வளர்க்கும் பொன்னன இந்நாட்டின்கண் ஏறத்தாழ 300 ஆண்டுகட்குமுன் தோன்றினர் இந்நூல் ஆசிரியராகிய **அபிராமி பட்டர்.**

மாயூரத்தினின்றும் காவிரிப்பூம்பட்டினம் செல்லும் வழியில் காலனைக் காலால் கடிந்த எம்பெருமான் நெஞ்சுகந்து கோயில் கொண்டிருக்கும் திருத்தலமாகிய திருக்கடவூர் இயற்கை எழிலும் தெய்வத் திருவருட் பெருக்கமும் பெற்று விளங்குகின்றது. அவ் வூரின்கண் ஆன்ற ஒழுக்கமும் நிறைந்த கல்வியும் பரந்த அறிவும் சிறந்த ஆற்றலும் கனிந்த பக்தியும் பொருந்திய அந்தணர் மரபில் ஞானக் கொழுந்தேபோல் தோன்றினர் அபிராமி பட்டர். இவருக் குக் குழந்தைப் பருவத்தில் பெற்றோர் இட்ட பெயர் இன்னதெனத் தெரியவில்லை. ஆயினும் கருவிலே திருவுடையராய்த் தலைமுறைத் தலைமுறையாக வந்த இசைக் கலையிலே வல்லவராய் அம்பிகையின் அருளானந்தக் கடலில் மூழ்கிச் சக்தி வணக்கத்தில் கருத்தொன்றி நின்ற இவரை அத்திருத்தலத்தில்வாழ் அம்பிகையின் திருநாமத் தைச் சேர்த்து அபிராமி பட்டர் என வழங்கியது சாலப் பொருந்து வதாகும். ஸ்ரீ அபிராமி அம்மைமீது இவர் கீர்த்தனம் ஒன்றும் பதிகம் ஒன்றும் பாடியிருப்பதாகத் தெரியவருகிறது.

இப்பெரியார் சக்தி பூஜையும் யோக நெறியும் செவ்வனே பயின்று வந்தார். அதனால் யோகசித்தி எய்தி என்றும் சிதாகா சத்தே அம்பிகையை ஒளிவடிவாகக் கண்டு பேரின்பத்தாழ்ந்திருந் தார். இவ்வாறு பத்தி நிறைந்து முத்தி நெறியில் பித்தர்போல வும் பேதையர்போலவும் உலகப் பற்றற்று அனுபூதிச் செல்வராய் விளங்கிய பட்டரை மற்றவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஏதோ ஒரு துர்த்தேவதையை ஆராதித்து வாமாசாரத்தைக் கைக் கொண்டு மனம் பேதலித்து அலைபவர் என்றே அவர்கள் எண்ணி னார்கள்; தூற்றவும் செய்தார்கள்.

சத்தியமான நித்தியத்தில் நிலைத்த மனமுடையார் மற்றவர் ஏச்சையும் பேச்சையும் ஒரு பொருளாகக் கருதுவரோ? ஆகையால் பட்டரும் உண்மை இன்னதென்று உணராத மக்களை மாக்கள் என்றே உன்னி வாழ்ந்திருந்தார்.

அக்காலத்தில் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு சரபோஜி மன்னர் ஆண்டு வந்தார். அவர் மஹாராஷ்டிர வம்சத்தைச் சேர்ந்தவர்; தெய்வ பக்தியும் மதப்பற்றும் மிகுந்தவர். அவர் ஒரு தை அமாவாசை தினத்தன்று காவிரி சங்கமத்திலே நீராட எண்ணித் தம் பரிவாரங்களுடன் காவிரிப்பூம்பட்டினம் சென்று தம் உள்ளக்கிடக்கையை நிறைவு செய்துகொண்டார்; திரும்புங்கால் ஸ்ரீ அமுத கடேசரையும் ஸ்ரீ அபிராமி அம்பிகையையும் தரிசனம் செய்து கொள்ளவேண்டும் என்ற அவா மிகுதியால் திருக்கடவூரை அடைந்தார். பின்னர், அரசர் தமது நித்தியானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு திருக்கோயிலுக்குச் சென்றார்.

அப்போது அபிராமி பட்டர் அம்பிகையின் ஆலயத்துச் சந்நிதியில் இவ்வுலக நினைவு ஏதுமின்றி தியான நிலையில் அமர்ந்திருந்தார். அவரது புரையற்ற தோற்றமும் புத்தொளி வீசும் முக நலமும் தியான நிலையில் சிறிதே முகிழ்ந்திருந்த இருவிழிகளும் அரசர் பெருமானின் அகத்தைக் கவர்ந்தன. சரபோஜி மன்னர் பத்தியிற் சிறந்தவராதலின் பட்டரின் தன்மையை ஒருவாறு உணர்ந்து அருகில் இருந்தோரை நோக்கி, "இவர் யார்?" என்று வினவினர்.

அப்போது அருகில் இருந்தவர்கள், "இவர் ஒரு பித்தர்; வேத விருத்தமான வாமாசாரங்களில் ஈடுபடுபவர்; ஏதோ ஒரு துர்த்தேவதையை வழிபடுகின்றவர்" என்று கூறினர்கள். அதைக் கேட்ட அரசர் ஒன்றும் கூறாது உட்சென்று அம்பிகையைத் தரிசனம் செய்தார். ஆனால் அரசருடைய மனத்தில் பட்டருடைய தோற்றம் மீண்டும் மீண்டும் தோன்றிக்கொண்டே இருந்தது. ஆகையால் திரும்பி வரும்போது அரசர் பட்டரோடு ஏதேனும் ஒரு முகாந்திரத்தை ஏற்படுத்திக்கொண்டு பேசவேண்டும் என்ற எண்ணம் உடையவராய் அவரை நோக்கி, "பட்டரே, இன்று என்ன திதி?" என்று கேட்டார்.

காலத்தொடு கற்பனை கடந்து துவாதசாந்தப் பெருவெளியில் துரியாதீதமாய்ப் பரநாத மூலத்தலத்திலே முளைத்தெழுந்த முழு மதியாக அம்பிகையைக் கண்டு அக்காட்சிக் களியிலே மதர்த்து நின்ற அபிராமி பட்டருடைய செவியில் அரசர் சொன்ன சொற்கள் அரைகுறையாக விழுந்தன; முழுமதியின் ஒளி வட்டத்

திடையே அம்பிகையின் அருள் தோற்றத்தை ஆனந்தமாய்க் கண்டு பரவச முற்றிருந்த நிலையில் வாய் குழறி, "இன்று பௌர்ணமி" என்று விடையிறுத்தார்.

அருகிலிருந்த பெரியார்கள் இது கேட்டு ஒன்றும் தோன்ருது நின்றனர். பட்டரைப்பற்றி இல்லனவும் பொல்லனவும் சொல்லி வந்தவர்கள் அரசரே பட்டரின் உன்மத்த நிலையை உணர்ந்து கொண்டார் என எண்ணி இறுமாந்தனர். அரசரும் 'அவர்கள் கூறியது உண்மையே போலும்' என எண்ணித் தம் இருப்பிடத்திற்கு ஏகினர்.

அரசரும் அவருடைய பரிவாரமும் அகன்ற பின்னர், தியானம் கலைந்தெழுந்த அபிராமி பட்டர் நிகழ்ந்ததை உணர்ந்து பெரிதும் வருந்தினர். தம்மை இதுகாறும் ஏசியும் பேசியும் பல்லாற்ருனும் இடையூறு புரிந்தும் வந்த மாந்தரை விலங்கென்று எண்ணி மாதவம் செய்து வந்த அம்பிகை அடியார், பொய்யரின் மொழிகள் மெய்யெனத் தோன்றுமாறு நிகழ்ந்த நிகழ்ச்சியை எண்ணி மறுகினர். உடனே பட்டர், தமக்கென்று ஒன்றேனும் இன்றி யாவற்றையும் அம்பிகைக்கே அர்ப்பணம் செய்துவிட்ட வைராக்யம் உடையவர் ஆதலின், அம்மையே இப்பழியினின்றும் தம்மை மீட்க வேண்டும் என்று உறுதி பூண்டார். அம்பிகையின் சந்நிதியில் ஆழ்ந்தவொரு குழி வெட்டி அதில் பெருநெருப்பு மூட்டி அதன் மேலே ஒரு விட்டத்தினின்றும் நூறு ஆரம் கொண்ட ஓர் உறியைக் கட்டித் தொங்கவிட்டார். பிறகு அதன் மீதேறி அமர்ந்து அம்பிகையை மனத்தால் நினைத்துத் தலையால் வணங்கி, "சோர்வினல் வந்த மாபெரும் பழியைத் துடைத்துத் தாரணி போற்றும் தலைமையைத் தாராளெனின் என் உடலை இவ்வெரிக்கு இட்டு உயிர் துறப்பேன்" எனக் கடுஞ்சூள் உரைத்து, "உதிக்கின்ற" எனத் தொடங்கும் இந்த அந்தாதியைப் பாடத் தொடங்கினர். ஒவ்வொரு பாடலும் முடிந்த உடனே உறியின் ஒவ்வொரு கயிற்றை அரிந்துகொண்டே வந்தார். இவ்வாருகக் கதிரவனும் மேலைக் கடலை நண்ணினன்; அப்போது எழுபத்தொன்பதாவது பாடலாகிய,

"விழிக்கே அருளுண்டு அபிராம வல்லிக்கு வேதம்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண்டு எமக்கவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்றுவெம் பாவங்க ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்தம் மோடென்ன கூட்டினியே"

என்ற பாடல் முடிந்தது. உடனே ஸ்ரீ அபிராமியம்பிகை பட்டருக்கு வெளிப்பட்டுத் தோன்றிக் காட்சி கொடுத்தருளினள்;

தன் தாடங்கம் ஒன்றைத் தனியே எடுத்து வான வீதியில் தவழவிட் டாள். அத்தாடங்கம் வட்ட மதியின் உருவாய்ப் பலகோடி நிலவின் ஒளிபொழிந்து நீலவானக் கடலிலே மின்வண்ண அன்னம் போல ஊர்ந்து வந்தது. ஆனந்த சொரூபிணியாய் ஞானப் பிழம் பாய்க் காட்சியளித்த அப்பிராட்டி பட்டரை நோக்கி, "வாய் சோர்ந்து மன்னனிடம் கூறிய சொல்லையும் மெய்யே என நிறுவி னேம்; தொடங்கிய அவ்வந்தாதியைத் தொடர்ந்து முடிப்பாயாக" என ஆணையிட்டு மறைந்தாள்.

'சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவருடன், புல்லும் பரிமளப் பூங்கொடி'யாகிய ஸ்ரீ அம்பிகையின் தரிசனத்தாலும் அமுத மாரியென அவள் கூறிய மொழியாலும் பரவசமுற்று,

**" கூட்டிய வாஎன்னைத் தன்னடி யாரில் கொடியவினை**
**ஓட்டிய வாஎன்கண் ஓடிய வாதன்னை உள்ளவண்ணம்**
**காட்டிய வாகண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவா**
**ஆட்டிய வாநடம் ஆடகத் தாமரை ஆரணங்கே"**

எனத் தம் அனுபவ நிலையைத் தெளிவுறப் பாடினர். மேலும் இருபது செந்தமிழ்ச் செய்யுட்களை இயற்றி அந்தாதியை முடித் தருளினர்.

திருத்தாடங்கத் திகழொளி புவனமெங்கும் விளங்கி நிற்க அந்த அதிசயத்தைக் கண்ட யாவரும் "அற்புதம்! அற்புதம்!!" என ஆரவாரம் செய்தார்கள். சரபோஜி மன்னரும் அது கண்டு வியந்து அம்பிகையின் அடியாரைப் பிழைத்த செயலுக்கு வருந்தி அவரடி பணிந்து தாம் செய்த பிழையைப் பொறுக்குமாறு வேண் டினர். நீர்கிழிய எய்த வடுப்போலச் சான்றோர் கொண்ட சினம் மாறுமன்றோ? அதனுல் பட்டரும் உவந்திருந்தார். அரசர் பட்ட ருக்கு ஏராளமான மானியம் கொடுத்துத் தலைமுறைத் தலைமுறை யாக அனுபவித்துக் கொள்ளும்படி வேண்டினர்.

அடியார் அறியாதிழைத்தது தவருயினும் தாமே வருந்தித் தன் சரணே அரணென்று புகுவாராயின் அடியார்க்குப் பழி வராது அருள்புரியும் பெருந்தகைமை எம்பிராட்டி ஸ்ரீ அபிராமிக்கே உள தாகும். இவ்வந்தாதியை முழுவதும் இடைவிடாது ஓதி வருபவர் இம்மையில் எல்லா நலன்களும் பெற்று மறுமையில் முக்திப் பேறும் அடைவர் என்பது திண்ணம்.



உ

சிவமயம்

ஸ்ரீ அபிராமி பட்டர் அருளிய

# அபிராமி அந்தாதி

## பொழிப்புரை

---

### கள்ளவாரணப் பிள்ளையார் காப்பு

தாரமர் கொன்றையும் சண்பக
　　மாலையும் சாத்தும்தில்லை
ஊரர்தம் பாகத்து உமைமைந்த
　　னேஉல(கு) ஏழும்பெற்ற
சீரபி ராமிஅந் தாதிஎப்
　　போதும்என் சிந்தையுள்ளே
காரமர் மேனிக் கணபதி
　　யேநிற்கக் கட்டுரையே.

மார்பில் கொன்றை மாலையையும் சண்பக மாலையையும் முறையே அணியும் தில்லைத் திருநகரத்து எம்பெருமானுக்கும் அவர் ஒரு பாகம் அகலாத உமையம்மைக்கும் மைந்தனாய் விளங்கும் கள்ளமிகு பேரெழில் கணபதியே, ஏழுலகும் பெற்ற பெருமைமிகு அபிராமி அம்பிகையைப் போற்றும் அந்தாதி என் மனத்தில் (இயற்றுவதற்குமுன் கருவாகவும் இயற்றியபின் பொருளாகவும்) இடைவிடாது நிற்க வாழ்த்தியருள்க.

## நூல்

1. உதிக்கின்ற செங்கதிர் உச்சித்
திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம்
போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக்
குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி
என்றன் விழுத்துணையே.

தன் நிறத்தால் உதயசூரியன், மஞ்சாடி மலர், தன்மை உணர்ந்தவர்கள் போற்றும் மாணிக்கம், மாதுளை மொக்கு, கொடி மின்னல், மணமிரு குங்குமக் குழம்பு ஆகியவைகளை நிகர்த்து விளங்குகின்ற, மென்மலரில் வாழும் திருமகளும் போற்றுகின்ற, சிறந்த திருமேனியையுடைய அபிராமி தேவியே என்றும் எனக்குத் துணையாவாள்.



2. துணையும் தொழுந்தெய்வ மும்பெற்ற
தாயும் சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட
வேரும் பனிமலர்ப்பூங்
கணையும் கருப்புச் சிலையுமென்
பாசாங் குசமும்கையில்
அணையும் திரிபுர சுந்தரி
யாவ(து) அறிந்தனமே.

குளிர்ந்த மலர் அம்பும் கரும்பு வில்லும் மெல்லிய பாசமும் அங்குசமும் கைகளில் அலங்காரமாகப் பிடித்திருக்கும் திரிபுரசுந்தரியே எங்களுக்குத் துணை; யாம் தொழும் தெய்வம்; எங்களைப் பெற்ற தாய்; வேதமாகவும் அவற்றின் கிளை (சாகை)களாகவும் கொழுந்து (உபநிஷதங்) களாகவும் அவை பதிந்த வேர் (பிரணவம்) ஆகவும் விளங்குகிருள். அத்தகைய அபிராமி தேவியின் திருவருளாலே இவற்றை யாம் உணர்ந்தோம்,

3. அறிந்தேன் எவரும் அறியா
மறையை அறிந்துகொண்டு
செறிந்தேன் உனது திருவடிக்
கேதிரு வேவெருவிப்
பிறிந்தேன்நின் அன்பர் பெருமைஎண்
ணுத கருமநெஞ்சால்
மறிந்தே விழுநர குக்குற
வாய மனிதரையே

அருட்செல்வத்தை அன்பர்க்கு அள்ளி வழங்கும் அபிராமித் தாயே, நின் அடியவர்களின் பெருமையை மனத்தாலும் எண்ணுத தீவினைமிக்க நெஞ்சம் காரணமாக மீண்டும் மீண்டும் நரகத்தில் வீழ்ந்து வருந்தும் மாக்களை விட்டுப் பிரிந்து வந்து விட்டேன்; அதனுல் ஒருவரும் உணராத மறை(ப்) பொருளை (வேதப்பொருளை-இரகசியப்பொருளை) உணர்ந்தேன்; அவ்வாறு உணர்ந்ததால் உன் திருவடியே அடைக்கலம் என்று பற்றிக் கொண்டேன்.



4. மனிதரும் தேவரும் மாயா
முனிவரும் வந்துசென்னி
குனிதரும் சேவடிக் கோமளமே
கொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும்
பகீரதி யும்படைத்த
புனிதரும் நீயும்என் புந்திஎந்
நாளும் பொருந்துகவே.

மனிதர்கள், தேவர்கள், மரணபயம் துறந்த முனிவர்கள் முதலியோர் வந்து தலையால் வணங்கும் பெருமை பெற்ற சிவந்த பாதங்களுடைய, என்றும் இளமைமிகு, அபிராமி தேவியே, கொன்றை மாலை யணிந்த சடையின்மேல் குளிர்ந்த நிலவும் பாம்பும் கங்கையும் அணிந்த புனிதமிகு பரமனும் நீயும் என் மனத்தில் இடையருது வீற்றிருந்தருளவேண்டும்.

5. பொருந்திய முப்புரை செப்புரை
செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சி மருங்குல்
மனோன்மணி வார்சடையோன்
அருந்திய நஞ்(சு)அமு தாக்கிய
அம்பிகை அம்புயமேல்
திருந்திய சுந்தரி அந்தரி
பாதம்என் சென்னியதே.

அபிராமிதேவி உயிர்களுக்கு ஆதாரமான மூவகை நிலைகள் யாவற்றிலும் பேதமின்றி நிறைந்திருக்கும் திரிபுரசுந்தரி ; மாணிக்கச் செப்பு போன்ற மார்பகங்களின் சுமையால் வருந்துவது போன்று விளங்கும் வஞ்சிக் கொடிபோன்ற இடையையுடைய மனோன்மணி (மனத்தை ஞான நிலைக்கு உயர்த்தப் பக்குவம் செய்யும் அம்பிகை) ; நீண்ட சடாமுடியுடைய சிவபெருமான் அருந்திய நஞ்சையும் (அவன் இறவாமற் காத்து) அமுதமாக மாற்றிய உமாதேவி ; பேரழகி ; பராகாச வடிவுடையாள் ; அவ்வம்பிகையின் தாமரையைக் காட்டிலும் மெல்லிய திருவடிகளை என் தலைமேற் கொண்டேன்.



6. சென்னிய(து) உன்பொன் திருவடித்
தாமரை சிந்தையுள்ளே
மன்னிய(து) உன்திரு மந்திரம்
சிந்துர வண்ணப்பெண்ணே
முன்னிய நின் அடி யாருடன்
கூடி முறைமுறையே
பன்னிய(து) என்றும்உன் றன்பர
மாகம பத்ததியே.

செந்நிறம் பொருந்திய திருமேனியுடைய அபிராமியம்மையே, நினது பொலிவுமிக்க திருவடித் தாமரைகள் என் தலைமேலன ; நினது மூலமந்திரம் என் நெஞ்சினுள்ளே நிலைபெற்று விளங்குகின்றது ; நின்னையே மறவாது தொழும் அடியார்களுடன் கலந்து ஆராய்ந்து முறையாகப் பல்காலும் யான் பாராயணம் செய்தது நினது மேலான ஆகம நெறியே யாகும்.

7. ததியுறு மத்திற் சுழலும்என்
ஆவி தளர்விலதோர்
கதியுறு வண்ணம் கருதுகண்
டாய்கம லாலயனும்
மதியுறு வேணி மகிழ்நனும்
மாலும் வணங்கிஎன்றும்
துதியுறு சேவடி யாய்சிந்து
ரானன சுந்தரியே.

தாமரை மலர்மேல் வாழ்கின்ற பிரமதேவனும், பிறை யணிந்த பெம்மானும், திருமாலும் வணங்கிப் போற்றுகின்ற திருவடிகளையுடைய அபிராமியே! சிந்தூர திலகம் விளங்கும் திரு முகமுடைய சுந்தரியே! தயிரைக் கடையும் மத்து சுழல்வதுபோல் பிறப்பு, வாழ்வு, இறப்பு எனச் சுழலும் என் உயிர் அவ்வாறு சுழன்று வருந்தாமல் நல்லதொரு கதியையடையுமாறு அருள் புரிவாயாக.



8. சுந்தரி எந்தை துணைவிஎன்
பாசத் தொடரைஎல்லாம்
வந்தரி சிந்துர வண்ணத்தி
ஞள்மகி டன்தலைமேல்
அந்தரி நீலி அழியாத
கன்னிகை ஆரணத்தோன்
கந்தரி கைத்தலத் தாள்மலர்த்
தாள்என் கருத்தனவே.

அபிராமிதேவி பேரழகி; எந்தைச் சிவபிரான் துணைவி; என் அகப்பற்று புறப்பற்று ஆகிய யாவற்றையும் போக்குகின்ற செந்நிறத் திருமேனி உடையவள்; மகிஷாசுரனின் தலைமேல் நின்று அவனை அழித்தவள்; நீலநிற முடையாள் (காளி); என்றும் கன்னி; பிரம கபாலத்தைக் கையில் ஏந்தியவள்; அவ்வம்பிகையின் மலர் போன்ற பாதங்களை எப்போதும் தியானிக்கின்றேன்.

9. கருத்தன எந்தைதன் கண்ணன
வண்ணக் கனகவெற்பிற்
பெருத்தன பால்அழும் பிள்ளைக்கு
நல்கின பேரருள்கூர்
திருத்தன பாரமும் ஆரமும்
செங்கைச் சிலையும்அம்பும்
முருத்தன மூரலும் நீயும்அம்
மேவந்தென் முன்நிற்கவே.

அபிராமி தேவியே! எந்தைச் சிவபிரான் கண்களிலும் கருத்திலும் விளங்குவனவும் நன்னிறம் கொண்ட கனகமலை போலும் கவின் பெற்றனவும் அழுத பிள்ளைக்கு (ஞானசம்பந்த மூர்த்திக்கு)ப் பால் நல்கியவையும் ஆகிய பேரருள் மிக்க மார்பகங் களும், அவற்றின்மேல் அசையும் மாலையும், செங்கைகளில் வில்லும் அம்பும், திருமுகத்தில் முருந்து போல் (வெண்ணிற) முத்துப் பற்களும் விளங்கித் தோன்ற எனக்குக் காட்சியளித்தருள வேண்டும்.



10. நின்றும் இருந்தும் கிடந்தும்
நடந்தும் நினைப்ப(து)உன்னை
என்றும் வணங்குவ(து) உன்மலர்த்
தாள்எழு தாமறையின்
ஒன்றும் அரும்பொரு ளேஅரு
ளேஉமை யேஇமயத்(து)
அன்றும் பிறந்தவ ளேஅழி
யாமுத்தி ஆனந்தமே.

எழுதப்படாமல் காதின் வழியாகவே கேட்டுக் கற்கப் படும் பெருமை வாய்ந்த வேதத்தின் முடிவிற் பொருந்திய பொருளே! அருளே உருவான அபிராமியே! உமையே! இமயமலையில் அக்காலத்தில் பிறந்தவளே! அழியாத முக்தி ஆனந்தமாக விளங்குபவளே! நான் நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும் எந்நிலையில் இருந்தாலும் நின்னையே தியானிக்கின்றேன்; உனது மலர் போன்ற பாதங்களையே வணங்கு கின்றேன்.

**11.** ஆனந்த மாய்என் அறிவாய்
நிறைந்த அமுதமுமாய்
வானந்த மான வடி(வு)உடை
யாள்மறை நான்கினுக்கும்
தானந்த மான சரணர
விந்தம் தவளநிறக்
கானந்தம் ஆடரங் காம்எம்பி
ரான்முடிக் கண்ணியதே.

மண், நீர், நெருப்பு, காற்று, வெளி என்ற பஞ்சபூத வடிவாயிருப்பவளான அபிராமிதேவி, நிறைந்த அமிர்தமாகவும் (அழியாத உண்மைப் பொருள்) அறிவாகவும் ஆனந்தமாகவும் எனக்கு விளங்குகிருள் (சச்சிதானந்த சொரூபி) ; வேதாந்த முடிவுக்கும் எட்டாத அம்பிகையின் திருவடித் தாமரைகள் திருவெண்காட்டில் (சாம்பல் பூத்த மயானத்தில்) திருநடமிடும் எம்பிரானின் தலைமாலையாக விளங்குகின்றன.



**12.** கண்ணிய(து) உன்புகழ் கற்ப(து)உன்
நாமம் கசிந்துபத்தி
பண்ணிய(து) உன்இரு பாதாம்
புயத்தில் பகல்இரவா
நண்ணிய(து) உன்னை நயந்தோர்
அவையத்து நான்முன் செய்த
புண்ணியம் ஏ(து) என்அம் மேபுவி
ஏழையும் பூத்தவளே.

ஏழுலகையும் பெற்றவளே! என் அபிராமித்தாயே! யான் எப்போதும் நினைப்பது உன் புகழே; கற்பது உன் நாமமே; மனம் நெகிழ்ந்து பக்தி செய்தது உன் திருவடித் தாமரைகளிலேயே; இரவும் பகலுமாக அணுகிச் சேர்ந்திருந்தது உன் அடியார் திருக்கூட்டத்திலேயே. இத்தகைய உயர்ந்த நிலையை யான் பெறுவதற்கு நான் செய்த புண்ணியம்தான் என்னவோ?

**13.** பூத்தவ ளேபுவ னம்பதி

ஞுன்கையும் பூத்தவண்ணம்

காத்தவ ளேபின் கரந்தவ

ளேகறைக் கண்டனுக்கு

மூத்தவ ளேஎன்றும் மூவா

முகுந்தற்(கு) இளையவளே

மாத்தவ ளேஉன்னை அன்றிமற்

ருேர்தெய்வம் வந்திப்பதே.

பதினுன்கு உலகையும் பெற்றவளே! அவற்றைக் காத்த வளே! பெற்றபடியே அவற்றைத் தன்னுள் அடக்கியவளே! கறைக் கண்டனுகிய சதாசிவனுக்கு மூத்தவளே! முகுந்தனுகிய திருமாலுக்குத் தங்கையே! பெரிய தவத்திற்குத் தலைவியாகிய அபிராமித்தாயே! உன்னையன்றி மற்ருெரு தெய்வத்தை வணங்கு வதா? (அது பொருந்தாது).



**14.** வந்திப் பவர்உன்னை வானவர்

தானவர் ஆனவர்கள்

சிந்திப் பவர்நல் திசைமுகர்

நாரணர் சிந்தையுள்ளே

பந்திப் பவர்அழி யாப்பர

மானந்தர் பாரில்உன்னைச்

சந்திப் பவர்க்(கு) எளிதாம்

எம்பிராட்டிநின் தண்ணளியே.

எம்பிராட்டி! அபிராமி தேவியே! உன்னை வணங்குப வர்கள் தேவர்கள் அசுரர்கள் முதலியோர் ; மனத்தில் ஒருமுகமாக தியானிப்பவர்கள் பிரமனும் விஷ்ணுவும் ; மனத்தில் கட்டுபவர் அழியாத பரமானந்தராகிய சிவபிரான்; ஆயினும் நின்னை வணங் கித் தரிசனம் செய்வோர்க்கு எளிதில் அருள் புரிகின்ருய். நின் கருணை தான் என்னே!

15. தண்ணளிக் கென்றுமுன் னேபல
கோடி தவங்கள்செய்வார்
மண்ணளிக் கும்செல்வ மோபெறு
வார்மதி வானவர்தம்
விண்ணளிக் கும்செல் வமும்அழி
யாமுத்தி வீடுமன்றே
பண்ணளிக் கும்சொல் பரிமள
யாமளைப் பைங்கிளியே.

இசைப்பது போலும் இன்சொற் கூறும் பசுங்கிளியாகிய அபிராமி அம்மையே! நின்னுடைய திருவருள் நாடிப் பலகோடி தவங்கள் செய்தவர்கள் இவ்வுலக அரசாட்சி ஒன்று மாத்திரமா பெறுவர்? சிறந்த தேவருலகை ஆளும் பேறும், அழியாத முக்தி யாகிய வீட்டின்பமும் அல்லவா பெறுவர்?



16. கிளியே கிளைஞர் மனத்தே
கிடந்து கிளர்ந்தொளிரும்
ஒளியே ஒளிரும் ஒளிக்கிட
மேஎண்ணில் ஒன்றுமில்லா
வெளியே வெளிமுதல் பூதங்க
ளாகி விரிந்தஅம்மே
அளியேன் அறிவள விற்(கு)அள
வான(து) அதிசயமே.

கிளியென விளங்கும் அபிராமித் தாயே! அடியார்களின் மனத்தகத்தே விளங்கித் தோன்றும் ஒளியே! ஒளிரும் ஒளிக்கெல் லாம் மூலகாரணமாக இருப்பவளே! ஆராய்ந்தால் ஒன்றுமில்லாத பராகாச வடிவாய் இருப்பவளே! விண், வளி, தீ, நீர், மண் என முறையே விரிந்து நிறைந்த தாயே! எளியவனாகிய என் சிற்றறி வுக்கு எட்டுமாறு நீ அளவுபட்டு நின்றது பேரதிசயமே.

17. அதிசய மான வடி(வு)உடை
யாள்அர விந்தமெல்லாம்
துதிசய ஆனன சுந்தர
வல்லி துணைஇரதி
பதிசய மான(து) அபசய
மாகமுன் பார்த்தவர்தம்
மதிசய மாகவன் ரேவாம
பாகத்தை வவ்வியதே.

அபிராமி தேவி அதிசயமான அழகுடையவள்; தாமரை மலர்கள் எல்லாம் துதிக்கும் வெற்றிமிகு முகத்தழகு கொழிக்கும் கொடி போன்றவள்; அத்தகைய அம்பிகை, இரதிமணாளனாகிய மன்மதன் பெற்ற வெற்றிகள் எல்லாம் தோல்வியாகும்படி நெற்றிக் கண்ணைத் திறந்து பார்த்த எம்பிரானின் மனத்தைக் குழைத்து அவரை வெற்றி கொள்ளத்தானே அவருடைய இடப் பாகத்தை கவர்ந்துகொண்டருளினாள்.



18. வவ்விய பாகத்(து) இறைவரும்
நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும் உங்கள் திருமணக்
கோலமும் சிந்தையுள்ளே
அவ்வியம் தீர்த்தென்னை ஆண்டபொற்
பாதமும் ஆகிவந்து
வெவ்விய காலன்என் மேல்வரும்
போது வெளிநிற்கவே.

அபிராமித் தாயே! கொடிய காலன் என்மேல் எதிர்த்து வரும் போது, அர்த்த நாரீஸ்வரராக நீங்கள் கொண்டிருக்கும் கோலமும் பிரிந்து நின்ற திருமணக் கோலமும் என் மனத்தினின்றும் அகப்பற்றையும் புறப்பற்றையும் அகற்றி என்னை ஆட்கொண்ட பொற்பாதமும் ஆகி இருவரும் வந்து காட்சியளித்தருளவேண்டும்.

19. வெளிநின்ற நின்திரு மேனியைப்
பார்த்தென் விழியும்நெஞ்சும்
களிநின்ற வெள்ளம் கரைகண்ட
தில்லை கருத்தினுள்ளே
தெளிநின்ற ஞானம் திகழ்கின்ற
தென்ன திருவுளமோ
ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும்
மேவி உறைபவளே.

ஒளிமிக்க கோணங்கள் ஒன்பதிலும் பொருந்தி உறைகின்ற அபிராமித் தாயே! வெளிப்பட்டு நிற்கின்ற நினது திருமேனியைக் காட்சியுற்று என் விழிகளிலும் மனத்திலும் உண்டான மகிழ்ச்சி வெள்ளத்திற்கு ஒரு கரைகாண இயலவில்லை; ஆயினும் மனத்திலே தெளிந்த ஞானம் விளங்கித் தோன்றுகின்றது; இஃது நினது திருவருட் பயனேயன்றோ?



20. உறைகின்ற நின்திருக் கோயில்நின்
கேள்வர் ஒருபக்கமோ
அறைகின்ற நான்மறை யின்அடி
யோமுடி யோஅமுதம்
நிறைகின்ற வெண்திங்க ளோகஞ்ச
மோஎன்றன் நெஞ்சகமோ
மறைகின்ற வாரிதி யோபூர
ணாசல மங்கலையே.

நித்திய கல்யாணியாகிய அபிராமி அம்மையே! நீ எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் நினது கணவராகிய சிவபிரானின் ஒரு பாகமோ? வேதங்களின் முதலோ? முடிவோ? அமிர்தம் நிறைந்து பொங்கும் வெண்ணிலவோ? வெண்டாமரையோ? இந்திரனுடைய செல்வமெல்லாம் மறைந்து கிடக்கும் பாற்கடலோ? என்னுடைய மனமோ? (எங்கும் நிறைந்துள்ளாயே!)

21. மங்கலை செங்கல சம்முலை
யாள்மலை யாள்வருணச்
சங்கலை செங்கைச் சகல
கலாமயில் தாவுகங்கை
பொங்கலை தங்கும் புரிசடை
யோன்புடை யாள்உடையாள்
பிங்கலை நீலிசெய் யாள்வெளி
யாள்பசும் பெண்கொடியே.

அபிராமி தேவி என்றும் சுமங்கலி; செங்கலசம் போன்று கவின் மிகு மார்பகங்களை உடையவள்; மலையரசன் மகள்; வெண் சங்கு வளையல்கள் ஒலிக்கும் செங்கை உடையவள்; சகல கலைகளி லும் வல்ல மயில் போன்றவள்; அலைதாவி நுரை பொங்கும் கங்கை யைச் சடாமுடியில் தரித்த சிவபெருமானின் ஒரு பாகத்தில் அமர்ந் தவள்; என்னை ஆண்டுகொண்டவள்; அந்த அபிராமி அம்மையே பிங்கலையா (பொன்னிறமுடையவளா)கவும் நீலியா (கருநிற முடையவளா)கவும் செய்யா (செந்நிறமுடையவ)ளாகவும் வெளியா (வெண்ணிற முடையவ)ளாகவும் பசும் பெண்கொடி யாகவும் விளங்குகின்ருள்.



22. கொடியே இளவஞ்சிக் கொம்பே
எனக்குவம் பேபழுத்த
படியே மறையின் பரிமள
மேபனி மால் இமயப்
பிடியே பிரமன் முதலாய
தேவரைப் பெற்றஅம்மே
அடியேன் இறந்(து)இங்(கு)இனிப்பிற
வாமல்வந்(து) ஆண்டு கொள்ளே.

இளைய வஞ்சிக் கொடியே! பொற்கொம்பே! யான் பக்குவம் அற்றவன் ஆயினும் எனக்குக் கிடைத்த கனியே! வேதத்தால் உணர்பொருளே! பனிமிகு இமயமலையில் தோன்றிய பிடியே! பிரமன் முதலிய எல்லாத் தேவர்களையும் பெற்றெடுத்த அபிராமித்தாயே! அடியேன் இம்முறை இறந்தபின் மேலும் பிறக் காமல் அருள் பாலிப்பாயாக.

23. கொள்ளேன் மனத்தில்நின் கோலம்அல்
லா(து) அன்பர் கூட்டந்தன்னை
விள்ளேன் பரசம யம்விரும்
பேன்வியன் மூவுலகுக்(கு)
உள்ளே அனைத்தினுக் கும்புறம்
பேஉள்ளத் தேவிளைந்த
கள்ளே களிக்கும் களியே
அளியஎன் கண்மணியே.

மூன்றுலகங்கட்கு உள்ளேயும் யாவற்றினுக்கும் வெளியேயும் என் உள்ளத்திலும் செழுமையாகத் தோன்றிய பேரின்பமாகிய தேனே! அடியவர்கள் உணர்ந்து களிப்புறும் களிப்பே! எளியவனு கிய என் கண்மணி போன்ற அபிராமி தேவியே! நின்னுடைய சிறந்த திருமேனிக் கோலமன்றி வேறொன்றையும் மனத்தால் நினைக்கமாட்டேன்; நின்னுடைய மெய்யடியார் திருக் கூட்டத்தி னின்றும் பிரியமாட்டேன்; பிற சமயங்களையும் விரும்பமாட்டேன்.



24. மணியே மணியின் ஒளியே
ஒளிரும் மணிபுனைந்த
அணியே அணியும் அணிக்கழ
கேஅணு காதவர்க்குப்
பிணியே பிணிக்கு மருந்தே
அமரர் பெருவிருந்தே
பணியேன் ஒருவரை நின் பத்ம
பாதம் பணிந்தபின்னே.

மாணிக்கமே! அம்மாணிக்க மணியில் தோன்றும் ஒளியே! ஒளிமிகும் அம்மாணிக்கங்கள் பதித்த அணியே! அந்த அணிகலன் களுக்கும் அழகு கொடுக்கும் அணியே! நின்னைச் சரணடையாத வர்க்குப் பிணியே! சரணடைந்தால் அப் (பிறவிப்) பிணிக்கு மருந்தே! தேவர்களுக்குப் பெருவிருந்தாய்த் தோன்றும் அபிராமி தேவியே! நின்னுடைய தாமரை மலர் போன்ற பாதத்தில் பணிந்த பின்னர் வேறொருவரையும் வணங்க மாட்டேன்.

25. பின்னே திரிந்துஉன் அடியாரைப்
பேணிப் பிறப்பறுக்க
முன்னே தவங்கள் முயன்றுகொண்
டேன்முதல் மூவருக்கும்
அன்னே உலகுக்(கு) அபிராமி
என்னும் அருமருந்தே
என்னே இனிஉன்னை யான்மற
வாமல்நின்(று) ஏத்துவனே.

மும்மூர்த்திகளுக்கும் தாயே! மூவுலகுக்கும் அபிராமி என்ற பெயர் கொண்ட அருமருந்தே! நின் அடியார் பின்னே சென்று அவரைப் போற்றி என் பிறப்பைப் போக்கிக்கொள்ளத் தேவையான தவங்கள் பலவும் முன்னமேயே முயன்று செய்து முடித்துக் கொண்டேன்; அத்தவம் காரணமாகவே இப்பிறவியில் நின்னை மறவாமல் போற்றுகின்றேன்; இனி எனக்குக் குறையேது?



26. ஏத்தும் அடியவர் ஈரே
ழுலகினை யும்படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவ
ராம்கமழ் பூங்கடம்பு
சாத்தும் குழல்அணங் கேமணம்
நாறும்நின் தாள்இணைக்(கு)என்
நாத்தங்கு புன்மொழி ஏறிய
வாறு நகையுடைத்தே.

மணமிக்க கடம்ப மாலையை யணிந்த அபிராமித் தாயே! நின்னைப் போற்றிப் புகழ்பவர்கள் பதினான்கு உலகையும் படைத்தும் காத்தும் அழித்தும் அரிய தொழில் புரியும் மும்மூர்த்திகள் ஆவர்; எனினும் நின் திருவடிகளில் என் நாவினின்றும் தோன்றிய வளமற்ற மொழி (அபிராமி அந்தாதி) யாகிய பாமாலை ஏற்றம் பெற்றிருப்பதைக் காண எனக்கே நகையுண்டாகிறது.

27. உடைத்தனை வஞ்சப் பிறவியை
உள்ளம் உருகும்அன்பு
படைத்தனை பத்ம பதயுகம்
சூடும் பணிஎனக்கே
அடைத்தனை நெஞ்சத்(து) அழுக்கைஎல்
லாம்நின் அருட்புனலால்
துடைத்தனை சுந்தரி நின்னருள்
ஏதென்று சொல்லுவதே.

அபிராமி தேவியே! என் நெஞ்சத்திருந்த ஆணவம், கன்மம், மாயை என்ற அழுக்குகளையெல்லாம் நினது அருள் என்ற நீரால் கழுவியருளினாய்; அவ்வாறு செய்து நினது இரண்டு பாத தாமரைகளையும் என் தலைமீது சூடிக்கொள்ளும் பணியை எனக்கே அருளினாய்; அதனால் என் கல்மனமும் கரைந்து பத்தி பண்ணுமாறு ஊக்கினாய்; அதனால் என்னை வஞ்சித்து மேலும்மேலும் தொடர்ந்து வந்த பிறப்பைப் போக்கினாய்; நினது திருவருளின் பெருமையை எவ்வாறு புகழ்வேன்.



28. சொல்லும் பொருளும் எனநட
மாடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடி
யேநின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலும் தொழும்அவர்க்
கேஅழி யாஅரசும்
செல்லும் தவநெறி யும்சிவ
லோகமும் சித்திக்குமே.

சொல்லையும் அதன் பொருளையும் போலத் துணைவராகிய எம்பிரானுடன் இடை பிரியாது இணைந்து நிற்கும் கொடி போன்ற அபிராமித் தாயே! அன்றலர்ந்த மலர்போன்ற நின் பாதத்தை இராப் பகலாகச் சிந்தித்துத் தொழுபவர்க்கே இவ்வுலகில் அழியாத அரச போகம் கிடைக்கும்; மேல் நன்னெறியிற் செலுத்தும் தவம் கைகூடும்; பின்னர்ச் சிவலோகமும் சித்திக்கும்.

29\. சித்தியும் சித்தி தருந்தெய்வ
மாகித் திகழும்பரா
சத்தியும் சக்தி தழைக்கும்
சிவமும் தவம்முயல்வார்
முத்தியும் முத்திக்கு வித்தும்வித்
தாகி முளைத்தெழுந்த
புத்தியும் புத்தியின் உள்ளே
புரக்கும் புரத்தையன்றே.

அபிராமி தேவியே, அஷ்டமாசித்திகளும், அச் சித்திகளைத் தருகின்ற தெய்வங்களாகி விளங்கும் பராசக்தியும், அப்பராசக்தியைத்தோங்கக் காரணமான பரசிவமும், அப்பரசிவத்தைக் குறித்து முனைந்து தவம் செய்பவர்க்கு முத்தியும், அம்முத்திக்கு விதைக்கும் விதையும், அவ்விதை முளைவிட்டுத் தோன்றிய ஞானமும், ஞானத்தின் உட்பொருளுமாகி நின்று பந்த முத்திகளில் காக்கின்ற திரிபுரசுந்தரி நீயே யல்லவா?



30\. அன்றே தடுத்(து) என்னை ஆண்டுகொண்
டாய்கொண்ட(து)அல்லவென்கை
நன்றே உனக்(கு) இனி நான்என்
செயினும் நடுக்கடலுள்
சென்றே விழினும் கரையேற்
றுகைநின் திருவுளமே
ஒன்றே பலவுரு வேயரு
வேஎன் உமையவளே.

தனிப்பொருளே! பலவுருவாய் விளங்குபவளே! உருவமற்ற பொருளே! உமை என்னும் என் அபிராமித் தாயே! அப்பொழுதே என்னைத் தீவினை சாராவண்ணம் தடுத்து ஆட்கொண்டாய்; இல்லை என்று சொல்வது உனக்கு நன்றன்று; ஆகையால் இனி நான் எது செய்தாலும்—பாசக் கடலினுள்ளே சென்று விழுந்தாலும்—முத்தி என்னும் கரையில் ஏற்றுதல் உன் கருணையேயாகும்.

**31.** உமையும் உமையொரு பாகனும்
ஏக உருவில்வந்திங்(கு)
எமையும் தமக்கன்பு செய்யவைத்
தார் இனி எண்ணுதற்குச்
சமையங் களுமில்லை ஈன்றெடுப்
பாள்ஒரு தாயும்இல்லை
அமையும் அமையுறு தோளியர்
மேல்வைத்த ஆசையுமே.

அபிராமி தேவியும் அத்தேவியை ஒரு பாகமாக உடைய எம்பிரானும் அர்த்த நாரீஸ்வர உருவில் எனக்குக் காட்சியளித்து என்னையும் தமக்கு அன்பு செய்து உய்யும்படி அனுக்கிரகித்தார். ஆகவே, இனி ஆராய்ந்து மேற்கொள்ளத்தக்க மதங்களும் இல்லை; இனி (பிறவியின்மையால்) என்னைப் பெற்றெடுக்கும் தாயும்இல்லை; பசுமையான மூங்கில் போலும் கொழுவிய தோள்களையுடைய பெண்களின்மேல் வைத்த ஆசையும் இல்லை.



**32.** ஆசைக் கடலில் அகப்பட்(டு)
அருளற்ற அந்தகன்கைப்
பாசத்தில் அல்லல் படஇருந்
தேனைநின் பாதம்என்னும்
வாசக் கமலம் தலைமேல்
வலியவைத்(து) ஆண்டுகொண்ட
நேசத்தை என்சொல்லு வேன்ஈசர்
பாகத்து நேரிழையே.

சிவபெருமான் இடப்பாகம் இடங்கொண்டருளிய அபிராமி தேவியே! நான் ஆசையென்னும் கரைகாணாக் கடலில் விழுந்து இரக்கமற்ற யமனுடைய கைப்பாகத்தில் அகப்பட்டுப் பெருந் துன்பத்தில் ஆழ இருந்தேன் ; அந்நிலையில் நின்னுடைய வாசமிக்க தாமரை மலர்போன்ற பாதத்தை என் தலைமேல் பதித்து என்னை ஆட்கொண்டாய்; அத்தகைய பேரன்பை எவ்வாறு புகழ்ந்து பாடுவேன்! (புகழ் சொல்லில் அடங்காது).

**33.** இழைக்கும் வினைவழி யேஅடும்
காலன் எனைநடுங்க
அழைக்கும் பொழுதுவந்(து) அஞ்சல்என்
பாய்அத்தர் சித்தம்எல்லாம்
குழைக்கும் களபக் குவிமுலை
யாமளைக் கோமளமே
உழைக்கும் பொழு(து)உன்னை யேஅன்னை
யேஎன்பன் ஓடிவந்தே.

எந்தைச் சிவபிரானின் சித்தம் முழுவதும் நெக்குருகச் செய்யும் மணமிக்க மார்பகங்களையுடைய யாமளையாகிய அபிராமி தேவியே! செய்த நல்வினை தீவினைகளுக்கேற்பக் காலம் பார்த்துக் கொல்லும் யமன் யான் நடுங்குமாறு என்னை அழைக்கும் பொழுதும் மிக்க வருத்தத்தை அடையும் பொழுதும் 'அன்னையே சரணம்' என்பேன். ஓடிவந்து என்னைக் காத்தருள்வாய்.



**34.** வந்தே சரணம் புகும்அடி
யாருக்கு வான்உலகம்
தந்தே பரிவொடு தான்போய்
இருக்கும் சதுர்முகமும்
பைந்தேன் அலங்கல் பருமணி
ஆகமும் பாகமும்பொன்
செந்தேன் மலரும் அலர்கதிர்
ஞாயிறும் திங்களுமே.

அபிராமி தேவி தன்னிடம் அன்பு கொண்டுவந்து 'சரணம்' என அடைக்கலம் புகும் அடியவர்களுக்கு அவர்கள் விரும்பியபடி வானுலக வாழ்வு கொடுத்து, தான் நான்முகனின் நாவிலும் தேன் துளிக்கும் துளவமாலையணிந்த மணிபொதிந்த திருமாலின் மார்பிலும், எம்பிரானின் இடப்பாகத்திலும், பொற்றாமரையிலும், அதனை மலர்த்தும் சூரியமண்டலத்திலும் சந்திர மண்டலத்திலும் விரும்பிச் சென்று வீற்றிருப்பாள்,

35. திங்கட் பகவின் மணம் நாறும்
சீறடி சென்னிவைக்க
எங்கட்(கு) ஒருதவம் எய்திய வாஎண்
ணிறந்த விண்ணோர்
தங்கட்கும் இந்தத் தவமெய்து
மோதரங் கக்கடலுள்
வெங்கட் பணியணை மேல்துயில்
கூரும் விழுப்பொருளே.

அலைமோதும் பாற்கடலில் கொடிய கண்களையுடைய பாம்பணையில் வைணவி என்னும் பெயரோடு அறிதுயிலில் அமர்ந்திருக்கும் அபிராமி தேவியே! பிறைமதியின் மணம் வீசும் சிறந்த நின்னடிகளை எங்கள் சென்னியின் மேற்கொள்ள எங்களுக்கு ஒரு பாக்கியம் இருந்தவாறு என்னே! தேவர்களுக்கும் இந்தப் பேறு கிடைக்குமோ?



36. பொருளே பொருள்முடிக் கும்போக
மேஅரும் போகம் செய்யும்
மருளே மருளில் வருந்தெரு
ளேஎன் மனத்துவஞ்சத்(து)
இருளே தும் இன்றி ஒளிவெளி
யாகி இருக்கும்உன்றன்
அருளே(து) அறிகின்றிலேன்
அம்புயாதனத்(து)அம்பிகையே.

பொருள்களின் உருவே! அப்பொருள்களைக் கொண்டு நுகரும் போகமே! அப்போகத்தால் உண்டாகும் மாயையே! அம்மாயையில் தோன்றும் தெளிவே! தாமரை மலரில் வீற்றிருக்கும் அபிராமி தேவியே! என் மனத்தில் மாயையின் காரியமாகிய அஞ்ஞான இருள் கொஞ்சமும் இல்லாமற் செய்யும் ஞான ஒளியே! பராகாசமாக விளங்கும் அம்பிகையே! உன்னுடைய திருவருள் எத்தகையது என்பதை யான் உணர முடியாது மயங்குகின்றேன்.

**37.** கைக்கே அணிவது கன்னலும்
பூவும் கமலம் அன்ன
மெய்க்கே அணிவது வெண்முத்து
மாலே; விட அரவின்
பைக்கே அணிவது பன்மணிக்
கோவையும் பட்டும்; எட்டுத்
திக்கே அணியும் திருவுடை
யான் இடம் சேர்பவளே.

எட்டுத் திசைகளே மாத்திரமே உடையாகக் கொண்ட திகம்பரனுகிய எம்பிரானுடைய இடப்பாகத்தில் பொலிந்து தோன்றும் அபிராமி தேவியே! நின் கைகளில் அழகுற அணிந்திருப்பன கரும்பு வில்லும் மலரம்பும்; கமலமலர் போலும் திருமேனியில் தரிப்பது வெண்முத்து மாலே ; இடையில் அணிவது பட்டும் மேகலேயும்.



**38.** பவளக் கொடியில் பழுத்த
செவ்வாயும் பனிமுறுவல்
தவளத் திருநகை யும் துணே
யாளெங்கள் சங்கரனேத்
துவளப் பொருது துடியிடை
சாய்க்கும் துணேமுலேயாள்
அவளேப் பணிமின் கண்
டீர் அம ராவதி ஆளுகைக்கே.

பவளக் கொடிபோலும் சிவந்து இன்பம் பெருகும் சிவந்த வாயையும் குளிர்ந்த முறுவல் பூக்கும் வெண்மைமிகு பல்வரிசையையும் துணேயாகக் கொண்டு எங்கள் சங்கரனே அவனது யோகம் துவண்டு கலேயுமாறு குழைத்துத் தன் இடையையும் வருந்துமாறு சாய்க்கும் மார்பகங்களேயுடையவள் அபிராமி தேவி. விண்ணுலகப் பேராட்சியை விரும்பினுல் அந்த தேவியை வணங்குங்கள்.

39. ஆளுகைக்(கு) உன்றன் அடித்தா
மரைகள் உண்(டு); அந்தகன்பால்
மீளுகைக்(கு)உன்றன் விழியின்
கடையுண்டு; மேல்இவற்றின்
மூளுகைக்(கு) என்குறை
நின்குறை யேஅன்று; முப்புரங்கள்
மாளுகைக்(கு) அம்பு தொடுத்தவில்
லான் பங்கில் வாள்நுதலே.

திரிபுரங்களை அழிக்கும் பொருட்டு அம்பு தொட்ட வில்லை யுடைய சிவபிரானின் இடப்பாகத்தில் வாழும் அபிராமி தேவியே! என்னை அடிமை கொள்ள உன்னுடைய திருவடித் தாமரைகள் உண்டு; யமனிடமிருந்து மீள உன்றன் கடைக்கண் பார்வை உண்டு; முயன்றால் பலன் உண்டு; முயலாதது என் குறைதானே யன்றி உன் குறையன்று.



40. வாணுதல் கண்ணியை விண்ணவர்
யாவரும் வந்திறைஞ்சிப்
பேணுதற்(கு)எண்ணிய எம்பெரு
மாட்டியைப் பேதைநெஞ்சில்
காணுதற்(கு) அண்ணியள் அல்லாத
கன்னியைக் காணும் அன்பு
பூணுதற்(கு) எண்ணிய எண்ணம்அன்றோ?
முன்செய் புண்ணியமே.

அபிராமி தேவி ஒளிமிக்க நெற்றிக் கண்ணையுடையவள்; தேவர்கள் யாவரும் வந்து வணங்கிப் போற்றுதற்கு எண்ணிய எம்பெருமாட்டி; அறியாமை நிறைந்த மனத்தால் காண முடியாத கன்னி; அத் தேவியைத் தரிசிக்க வேண்டும் என்ற பக்தி எண்ணம் எனக்கு உண்டாயிற்றே! அது அல்லவா முற்பிறவிகளில் யான் செய்த புண்ணியம்!

41. புண்ணியம் செய்தன மேமன
மேபுதுப் பூங்குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும்
கூடிநம் காரணத்தால்
நண்ணிஇங் கேவந்து தம்மடி
யார்கள் நடுவிருக்கப்
பண்ணிநம் சென்னியின்
மேல்பத்ம பாதம் பதித்திடவே.

மனமே! நம்பொருட்டு குவளை போன்ற கண்களையுடைய அபிராமி தேவியும் அவர் கணவரான செய்ய திருமேனியுடைய சிவபிரானும் அருகாக இங்கே வந்து நம்மை அடியார்கள் திருக் கூட்டத்தில் இருக்குமாறு செய்து நம் தலைமீது திருவடித் தாமரை களை அடையாளமாகப் பதித்தனர். அவ்வாறு அவர்கள் அருள் புரிய நாம் புண்ணியமல்லவா செய்திருக்கிறோம்? (என்னே நம் பாக்கியம்!)



42. இடங்கொண்டு விம்மி இணைகொண்(டு)
இறுகி இளகிமுத்து
வடங்கொண்ட கொங்கை மலைகொண்(டு)
இறைவர் வலிய நெஞ்சை
நடங்கொண்ட கொள்கை
நலங்கொண்ட நாயகி நல்லரவின்
படங்கொண்ட அல்குல்
பனிமொழி வேதப் பரிபுரையே.

பரந்து கதிர்த்து ஒன்றற்கொன்று இணையாக வலிமையும் மென்மையும் ஒருங்கே கொண்டு முத்துமாலை ஒளிவீசும் மார்பகங் களாகிய மலைகளைக் கொண்டு சிவபிரானது வலிமைமிக்க மனத்தை எண்ணியபடியெல்லாம் ஆட்டுவிக்கும் அபிராம சுந்தரியே! பாம் பின் படம்போலும் அகன்ற மடியை உடையவளே! குளிர்ந்த இன் மொழி பேசும் அம்பிகையே! வேதமாகிய சிலம்புகளை அணிந்துள்ள தேவியே! (என்னைக் காத்தருள்க.)

43. பரிபுரச் சீறடி பாசாங்
குசைபஞ்ச பாணிஇன்சொல்
திரிபுர சுந்தரி சிந்துர
மேனியள் தீமைநெஞ்சில்
புரிபுர வஞ்சரை அஞ்சக்
குனிபொருப் புச்சிலைக்கை
எரிபுரை மேனி இறைவர்செம்
பாகத்(து) இருந்தவளே.

மனத்தால் தீமை புரிதலையே கருதும் வஞ்சகர்களாகிய திரிபுரங்களை இடமாகக் கொண்ட அசுரர்கள் அஞ்சி அழியுமாறு மலை வில்லை வளைப்பவராகிய எரியொத்த செம்மேனி எம்மான் தன் இடப்பாகத்தை இடமாகக் கொண்டு உறையும் அபிராமி தேவியே! நீ சிலம்பணிந்த சிற்றடிகளும் பாசமும் அங்குசமும் உடையவள்; பஞ்ச பாணங்களை உடையவள்; இனிமையான சொற்களைப் பேசும் திரிபுரசுந்தரி; சிந்துரம் போலும் சிவந்த திருமேனியுடையவள்.



44. தவளே இவள்எங்கள் சங்கர
னார்மனை மங்கலமாம்
அவளே அவர்தமக்(கு) அன்னையும்
ஆயினள் ஆகையினால்
இவளே கடவுளர் யாவர்க்கும்
மேலை இறைவியும்ஆம்
துவளேன் இனியொரு தெய்வமுண்
டாகமெய்த் தொண்டுசெய்தே.

அபிராமி தேவி எங்கள் சங்கரனார்க்கு இல்லத் துணைவியாகும் பேறுடையாள்; அவளே அவர்க்கு அன்னையும் ஆவாள்; ஆகையால் அத்தேவியே எல்லாக் கடவுளர்க்கும் மேலான இறைவியாவாள்; எனவே, வேறொரு முதற்றெய்வம் உண்டென்று கொண்டு அத் தெய்வத்திற்கு மெய்த்தொண்டு செய்து வாடமாட்டேன்.

45. தொண்டுசெய் யாதுநின் பாதம்
தொழாது துணிந்திச்சையே
பண்டுசெய் தார்உள ரோஇல
ரோஅப் பரிசடியேன்
கண்டுசெய் தால்அது கைதவ
மோ அன்றிச் செய்தவமோ
மிண்டுசெய் தாலும் பொறுக்கைநன்
றேபின் வெறுக்கையன்றே.

அபிராமி தேவியே! நினக்குத் தொண்டு செய்யாமல் நின் பாதம் தொழாமல் துணிந்து தம் மனக்கருத்துப்படியே தொழில் நிகழ்த்திய ஞானச் செல்வர்கள் பண்டைக் காலத்தில் இருந்தார் கள் அல்லவா? அவர்கள் செய்த முறைப்படியே (விதி முறைகளுக்கு மாறாக) நானும் செய்தால் அது நின்னால் வெறுக்கத் தக்கதா? பொறுத்துப் போற்றிக் கொள்ளத் தக்கதா? நான் அறியேன். ஆயினும் நான் விலக்கான செயல்களைச் செய்தாலும் நீ பொறுத்துக் கொள்ளுதலே நீதியாகும். என்னையும் அச்செயலையும் வெறுத்தல் தகாது.



46. வெறுக்கும் தகைமைகள் செய்யினும்
தம்மடி யாரைமிக்கோர்
பொறுக்கும் தகைமை புதியதன்
றேபுது நஞ்சைஉண்டு
கறுக்கும் திருமிடற் றான்இடப்
பாகம் கலந்தபொன்னே
மறுக்கும் தகைமைகள் செய்யினும்
யான்உன்னை வாழ்த்துவனே.

நஞ்சை உண்டு கருத்த கண்டமுடைய சிவபிரான்தன் இடப் பாகத்தில் அமர்ந்த பொன்போன்ற அபிராமி தேவியே! வெறுக்கத் தக்க குற்றங்கள் செய்தபோதிலும் பெரியோர்கள் தம் அடியவர் களைப் பொறுத்துக் கொள்வர்; அவ்வாறு பொறுத்துக் கொள்வது புதியதன்று. ஆகையால் நீ என்னைப் பொறுத்துக் கொள்ளாது விலக்கி ஒதுக்கினாலும் யான் உன்னை விடாமல் தொடர்ந்து வாழ்த்தி வழிபடுவேன்.

47. வாழும் படியொன்று கண்டுகொண்
டேன்மனத் தேயொருவர்
வீழும் படியன்று விள்ளும்
படியன்று வேலைநிலம்
ஏழும் பருவரை எட்டும்எட்
டாமல் இரவுபகல்
சூழும் சுடர்க்கு நடுவே
கிடத்து சுடர்கின்றதே.

பேரின்ப வாழ்வு வாழ்வதற்குப் பற்றுக் கோடாகிய ஒன்றை, அபிராமி தேவியை, ஞானக் கண்களால் கண்டுகொண்டேன்; அது மனத்தால் விரும்பி உருவாக்கப் படுவதன்று; வாயால் சொல் லும் தகைமைத்தன்று; அப்பேரொளியே ஏழு கடல்களுக்கும் ஏழுலகிற்கும் எட்டு மலைகட்கும் எட்டாமல் அப்பாலாய் நின்று சூரிய மண்டலத்திலும் சந்திர மண்டலத்திலும் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றது.



48. சுடரும் கலைமதி துன்றும்
சடைமுடிக் குன்றில் ஒன்றிப்
படரும் பரிமளப் பச்சைக்
கொடியைப் பதித்துநெஞ்சில்
இடரும் தவிர்த்திமைப் போதிருப்
பார்பின்னும் எய்துவரோ?
குடரும் கொழுவும் குருதியும்
தோயும் குரம்பையிலே.

ஒளிமிக்கு விளங்கும் பிறைமதியை அணிந்த சடா முடியை யுடைய சிவபிரானுகிய செம்பவளக் குன்றில் பொருந்திப் படரும் வாசமிக்க பச்சைப் பசுங்கொடி போன்ற அபிராமி தேவியை நெஞ்சத்தில் பதித்து எவ்வகைச் சஞ்சலமும் நீங்கி யோகத்தின் கண் இமைப்போதாயினும் அமர்ந்திருக்கும் அடியார்கள், குடலும் இறைச்சியும் இரத்தமும் மிக்க இவ்வுடலாகிய கூட்டிலே மீண்டும் பொருந்துவார்களோ? (பிறப்பார்களோ ? மாட்டார்கள்.)

**49.** குரம்பை அடுத்துக் குடிபுக்க

ஆவிவெங் கூற்றுக்கிட்ட

வரம்பை அடுத்து மறுகும்அப் போது

வளைக்கை அமைத்(து)

அரம்பை அடுத்த அரிவையர்

சூழவந்(து) அஞ்சல்என்பாய்

நரம்பை அடுத்த இசைவடி

வாய்நின்ற நாயகியே.

யாழின் நரம்பைப் பொருந்தி ஏழிசை வடிவாய் நின்ற அபிராமி தேவியே, இவ்வுடலைச் சேர்ந்து குடிபுகுந்த என் உயிர், யமனுக்கு வரம்பாக இருந்த ஆயுள் எல்லையை அடைந்து, மரணத்திற்கு அஞ்சி வருந்தும்போது, நின் வளைக்கையால் அஞ்சல் என்று அமைத்து, அரம்பை முதலான தேவமகளிர் சூழ வந்து அபயம் அளித்தருள வேண்டும்.



**50.** நாயகி நான்முகி நாரா

யணிகை நளினபஞ்ச

சாயகி சாம்பவி சங்கரி

சாமளை சாதிநச்சு

வாயகி மாலினி வாராகி

சூலினி மாதங்கிஎன்

றாயகி யாதி உடையாள்

சரணம் அரண்நமக்கே

உலக நாயகி; பிரம சக்தி ; விஷ்ணுசக்தி ; தாமரைக் கையில் மலரம்புகளை ஏந்துபவள் ; சம்புவின் சக்தி ; இன்பமளிக்கும் சங்கரி; பசுமைமிகு எழிலுடையாள் ; நாகாபரணம் அணிந்தவள் ; உலகளிக்கும் வாராகி ; சூலமுடையாள் ; மதங்க முனிவர் மகள் ; என்றெல்லாம் பல்வேறு புகழுடையாள் எங்கள் அபிராமி தேவி ; அத்தேவியின் பாதங்களே எங்களுக்குப் புகலிடமாகும்.

51\. அரணம் பொருள்என்று அருள்ஒன்
றிலாத அசுரர்தங்கள்
முரண்அன்(று) அழிய முனிந்தபெம்
மானும் முகுந்தனுமே
சரணம் சரணம் எனநின்ற
நாயகி தன்னடியார்
மரணம் பிறவி இரண்டும்எய்
தார்இந்த வையகத்தே.

திரிபுரங்கள் தமக்கு உறுதியான இடங்கள் என்று கருதிய அருளற்ற அசுரர்களின் வலிமை அழியுமாறு சினந்து முப்புரங்களும் ஒருங்கே குலையச் செய்த சிவபிரானும் விஷ்ணுவும் அடைக்கலம் அடைக்கலம் என வேண்டி நின்ற தலைவி எம் அபிராமி தேவி. அத்தேவியின் அடியார்கள் இவ்வுலகில் மரணமும் பிறவியும் இனி அடையார்கள். (பிறப்பிறப்பற்ற பெருநிலையை அடைவர்.)



52\. வையம் துரகம் மதகரி
மாமகு டம்சிவிகை
பெய்யும் கனகம் பெருவிலை
ஆரம் பிறைமுடித்த
ஐயன் திருமனை யாள்அடித்
தாமரைக்(கு) அன்புமுன்பு
செய்யும் தவம்உடை யார்க்குள
வாகிய சின்னங்களே.

தேர், குதிரை, யானை, மணிமுடி, சிவிகை, சிற்றரசர்கள் கட்டும் கப்பம், மதிப்புமிக்க முத்து மாலைகள் முதலியன பிறை முடித்த பெம்மானின் திருத்தேவியாகிய அபிராமி அம்மையின் திருவடித் தாமரைகளில் பக்தி செய்யும் பேறு பெற்றவர்கட்குரிய அடையாளங்களாவன. (அம்பிகையின் பக்தர்கள் சக்கரவர்த்திகளாவர் என்பது கருத்து.)

**53.** சின்னஞ் சிறிய மருங்கினில்
சாத்திய செய்யபட்டும்
பென்னம் பெரிய முலையும்முத்
தாரமும் பிச்சிமொய்த்த
கன்னங் கரிய குழலும்கண்
மூன்றும் கருத்தில்வைத்துத்
தன்னந் தனியிருப் பார்க்கிது
போலும் தவமில்லையே.

அபிராமி தேவியின் நுண்ணிடையிற் சாத்திய பட்டுடையையும் பெரிய மார்பகங்களையும் முத்து மாலைகளையும் பிச்சிப்பூ மாலையையும் கரிய கூந்தலையும் முக்கண்களையும் கருத்தில் தியானம் செய்து கொண்டு தன்னந்தனியே யோகநிலையில் அமர்ந்திருப்பவர்களுக்கு இது போன்ற பெரிய தவம் வேறில்லை.



**54.** இல்லாமை சொல்லி ஒருவர்தம்
பால்சென்(று) இழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவி
ரேல்நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர்தம்
பால்ஒரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரை
பாதங்கள் சேர்மின்களே.

ஒருவரிடம் சென்று தன் ஏழ்மையைச் சொல்லி இழிவு படாமலிருக்க விரும்பினல், என்றும் தவம் செய்யாமையையே பழகிய கயவர்கள்பால் யான் ஒருபோதும் சொல்லாதபடி என்னைத் தடுத்தாட்கொண்ட திரிபுரையாகிய அபிராமி அம்பிகையின் பாதங்களைப் புகலாக அடையுங்கள்.

55. மின்னு யிரம்ஒரு மெய்வடி
வாகி விளங்குகின்ற
தன்னுள் அகமகிழ் ஆனந்த
வல்லி அருமறைக்கு
முன்னுய் நடுவெங்கு மாய்முடி
வாய முதல்விதன்னை
உன்னு(து) ஒழியினும் உன்னினும்
வேண்டுவ(து) ஒன்றிலையே.

அபிராமி தேவி ஆயிரம் மின்னல்கள் ஒருருக்கொண்டு விளங்குவது போலும் ஒளிமிக்க திருமேனியுடையவள்; அடியார்களின் அகமகிழ்ச்சிக்கு மூலகாரணமாயுள்ள ஆனந்தவல்லி; வேதத்தின் ஆதியாகவும் இடையாகவும் முடிவாகவும் விளங்குகின்ற முதல்வி; அத்தேவியை உயிர்கள் தம் மயக்கத்தால் போற்றுதொழிந்தாலும் புண்ணியவலிமையால் போற்றினுலும் அதனுல் அத்தேவிக்கு வேண்டிய பொருள் ஒன்றுமில்லை.



56. ஒன்ருய் அரும்பிப் பலவாய்
விரிந்(து)இவ் வுலகெங்குமாய்
நின்ருள் அனைத்தையும் நீங்கிநிற்
பாள்என்றன் நெஞ்சினுள்ளே
பொன்ருது நின்று புரிகின்ற
வாஇப் பொருள் அறிவார்
அன்ரு லிலையில் துயின்றபெம்
மானும்என் ஐயனுமே.

அபிராமி தேவி, பராசக்தி என்ற ஒரே வடிவாகவும் ஏனைப் பல சக்திகளின் வடிவமாகவும் உலகெங்கும் பரந்து நிற்கின்ருள்; யாவற்றினின்றும் வேருகவும் விளங்குகின்ருள்; அத்தகைய எம் பிராட்டி என் மனத்தகத்தே நீங்காது நிறைந்திருக்கின்ருள்; அருள் புரிகின்ருள்; இஃதொரு வியப்பன்ருே? இதன் உட்பொருளை ஆலிலையின்மேல் அறிதுயிலில் அமர்ந்த பெருமானும் என் அப்பனுகிய சிவபிரானுமே அறிவர்.

57. ஐயன் அளந்த படியிரு*
நாழிகொண்(டு) அண்டம்எல்லாம்
உய்ய அறம்செயும் உன்னையும்
போற்றி ஒருவர்தம்பால்
செய்ய பசுந்தமிழ்ப் பாமாலை
யுங்கொண்டு சென்றுபொய்யும்
மெய்யும் இயம்பவைத் தாய்இது
வோஉன்றன் மெய்யருளே.

அபிராமி தேவியே! ஏகாம்பரநாதர் அளித்த இருநாழி நெல்லைக்கொண்டு அண்டமெல்லாம் உய்யும்படிக் காமாட்சி என்னும் பெயருடன் அறம் செய்யும் உன்னையும் புகழ்ந்து போற்றி அவ்வாறே தகுதியற்ற நரன் ஒருவனிடத்தும் சென்று உள்ளதையும் இல்லதையும் சொல்லிப் பாடும்படி வைத்தனையே; இதுவா உன்றன் மெய்யருள்? ('விரைந்து எனக்கு அருள் புரிக' என்பது கருத்து.)

---

*காஞ்சீபுரத்தில் இறைவன் அருளிய இருநாழி (ஓர் சிறிய அளவு) நெற்கொண்டு முப்பத்திரண்டறமும் அம்பிகை வளர்த் தாள் என்பது வரலாறு. இதனாலேயே அம்பிகைக்கு 'அறம் வளர்த்த நாயகி' என்ற பெயர் உண்டாயிற்று. குமரகுருபரரும் 'இல்லாளே முப்பத் திரண்டறமும் செய்திருப்ப' என்று வியந்துரைக்கின்றார்.



58. அருணும் புயத்தும்என் சித்தாம்
புயத்தும் அமர்ந்திருக்கும்
தருணம் புயமுலைத் தையல்நல்
லாள்தகை சேர்நயனக்
கருணம் புயமும் வதனும்
புயமும் கராம்புயமும்
சரணம் புயமும்அல் லாற்கண்டி
லேன்ஒரு தஞ்சமுமே.

செந்தாமரையிலும் என் மனத்தாமரையிலும் அமர்ந்திருக்கும் தாமரைமொக்குப் போலும் சிறந்த மார்பகங்களையுடைய அபிராமி தேவியின் தகுதிமிக்க கண்களாகிய கருணைத் தாமரையும் முகத்தாமரையும் கரத்தாமரையும் பாத தாமரையும் அல்லாமல் வேறொரு புகலிடமும் எனக்கில்லை.

59. தஞ்சம் பிறிதில்லை ஈதல்ல
தென்றுன் தவநெறிக்கே
நெஞ்சம் பயில நினைக்கின்றி
லேன்ஒற்றை நீள்சிலையும்
அஞ்சம்பும் இக்(கு)அலர் ஆகநின்
ருய்அறி யார்எனினும்
பஞ்சஞ்சும் மெல்லடி யார்அடி
யார்பெற்ற பாலரையே.

நீண்ட கரும்புவில்லும் ஐந்து மலரம்புகளும் கொண்ட அபிராமி தேவியே! நின் தவநெறியேயன்றி அடைக்கலம் வேறொன் றில்லையென அறிந்தும் அவ்வழியில் மனத்தால் முயன்று பயில எண்ணவில்லை; பேதையர் எனினும் செம்பஞ்சுக் குழம்பு ஒளி வீசும் அடிகளையுடைய பெண்கள் தாம் பெற்ற குழந்தைகளைத் தண்டிக்க மாட்டார்கள். (அதுபோலவே நீயும், என்னை வீணன் எனப் புறக்கணியாமல் அருள் பாலிக்கவேண்டும்.)



60. பாலினும் சொல்இனி யாய்பனி
மாமலர்ப் பாதம்வைக்க
மாலினும் தேவர் வணங்கநின்
ருேன்கொன்றை வார்சடையின்
மேலினும் கீழ்நின்று வேதங்கள்
பாடும்மெய்ப் பீடம்ஒரு
நாலினும் சாலநன் ருேஅடி
யேன்முடை நாய்த்தலையே.

பாலைக்காட்டிலும் இனிய சொற்களைப் பேசும் அபிராமியே, நீ நின் குளிர்ச்சி பொருந்திய மலர்ப்பாதங்களை, திருமாலும் மற்றைத் தேவர்களும் வணங்கும் பெருமை மிக்க கொன்றையந் தார் சூடிய எம்பெருமான் திருமுடிமீதும் பதிப்பதுண்டு; நின் திருவடிக்கண் நின்று வேதங்கள் போற்றிப் புகழும் நான்கு பிரணவ பீடங்களிலும் பதிப்பதுண்டு; இன்ருே அடியேனது நாற்றமிகு நாய்த்தலைபோலும் தலையின்மீது புனிதமான நின் பாதத்தைப் பதித்தனை; அஃது முன்கூறியவைகளைக் காட்டிலும் சிறந்ததோ?

61. நாயே னையும் இங்(கு) ஒருபொரு
ளாக நயந்துவந்து
நீயே நினைவின்றி ஆண்டுகொண்
டாய்நின்னை உள்ளவண்ணம்
பேயேன் அறியும் அறிவுதந்
தாய்என்ன பேறுபெற்றேன்
தாயே மலைமக ளேசெங்கண்
மால்திருத் தங்கைச்சியே.

உலகத்திற்கெல்லாம் தாயாகிய அபிராமி தேவியே! மலை மகளே! திருமாலுக்குத் தங்கையே! நாய்போல் கீழ்ப்பட்ட என்னையும் ஒரு பொருளாகக் கருதி நீயாகவே வலியவந்து என் நினைவு இல்லாமலே என்னைத் தடுத்து ஆட்கொண்டாய்; பேய்போலும் சஞ்சலம் மிக்க நான் உன்னை உள்ளபடி அறியும் பேரறிவு கொளுத்தினாய்; நான் பெற்றது பெறுதற்கரிய பேறு அல்லவா?



62. தங்கச் சிலைகொண்டு தானவர்
முப்புரம் சாய்த்துமத
வெங்கண் கரியுரி போர்த்தசெஞ்
சேவகன் மெய்யடையக்
கொங்கைக் குரும்பைக்
குறியிட்ட நாயகி கோகனகச்
செங்கைக் கரும்பும் அலரும்எப்
போதும்என் சிந்தையதே.

பொன்மலையை வில்லாகக் கொண்டு அசுரர்களின் முப்புரங்களையும் எரித்தவனும், மதயானையின் தோலையுரித்துப் போர்த்துக் கொண்டவனும் ஆகிய சிவபிரானது உடல் முழுவதும் குரும்பை போன்ற மார்பகங்களால் குழைத்துக் குறியிட்ட நாயகி அபிராமி தேவியே; அத் தேவியின் சிவந்த மலர்போலும் கையில் விளங்கும் கரும்பும் அஞ்சம்பும் எப்போதும் என் மனத்தில் நிலைத்திருக்கின்றன.

63. தேறும் படிசில ஏதுவும்
காட்டின்முன் செல்கதிக்குக்
கூறும் பொருள் குன்றில்
கொட்டும் தறிகுறிக் கும்சமயம்
ஆறும் தலைவி இவளாய்
இருப்ப(து) அறிந்திருந்தும்
வேறும் சமயம்உண்
டென்றுகொண் டாடிய வீணருக்கே.

அறுவகைச் சமயத்திற்கும் அபிராமி தேவியே தலைவி என்பது அறிந்திருந்தும் வேறு சமயங்களும் மெய் என்று கொண்டாடும் பேதையர்க்குத் தெளிவான காரணங்கள் காட்டி மேல் அடையத் தரும் நற்கதிக்கு மூலமான உண்மைகளையும் எடுத்துக் கூறுதல் 'மலையை உடைத்து விடுகிறேன் என்று மரத்தடியால் அதனைத் தாக்குவது' போலும்.



64. வீணே பலிகவர் தெய்வங்கள்
பாற்சென்று மிக்கஅன்பு
பூணேன் உனக்(கு) அன்பு
பூண்டுகொண் டேன்நின் புகழ்ச்சியன்றிப்
பேணேன் ஒருபொழு தும்திரு
மேனிப்ர காசமன்றிக்
காணேன் இருநில மும்திசை
நான்கும் ககனமுமே.

அபிராமி தேவியே! வீணாக பலி கொள்ளும் தெய்வங்களுக்கு அன்பு பூணேன்; உனக்கே அன்பு கொண்டேன்; நின் புகழையன்றி வேறொன்றையும் போற்றமாட்டேன்; நினது திரு மேனித் திருவொளியையன்றி விண்ணிலும் மண்ணிலும் நான்கு திசைகளிலும் வேறெதையும் காணேன்.

**73.** தாமம் கடம்பு படைபஞ்ச
பாணம் தனுக்கரும்பு
யாமம் வயிரவர் ஏத்தும் பொழு(து)
எமக் கென் றுவைத்த
சேமம் திருவடி செங்கைகள்
நான்(கு)ஒளி செம்மையம்மை
நாமம் திரிபுரை ஒன்ருே
டிரண்டு நயனங்களே.

அபிராமி தேவி திரிபுரை என்ற பெயர் கொண்டவள். அத் தேவியினது நெற்றிக்கண்ணும் மற்ற இருகண்களும் நான்கு கைகளும் செந்நிறம் கொண்டன; மாலே கடம்ப மாலே; படை பஞ்சபாணங்கள்; வில் கரும்பு. தேவியை மேலாகத் துதிக்கும் நேரம் பைரவர்க்குரிய நள்ளிரவு நேரம்; அந்த அம்பிகை எமக் கென்று வைத்த செல்வம் திருவடித் தாமரைகளே.



**74.** நயனங்கள் மூன் றுடை நாதனும்
வேதமும் நாரணனும்
அயனும் பரவும் அபிராம
வல்லி அடியிணையைப்
பயன்என் று கொண்டவர் பாவையர்
ஆடவும் பாடவும்பொன்
சயனம் பொருந்து தமனியக்
காவினில் தங்குவரே.

முக்கண் படைத்த பரமனும் வேதமும் திருமாலும் பிரமனும் போற்றித் துதிக்கும் அபிராமவல்லித் தாயின் திருவடிகளேச் சேர்தலே பிறவி அடுத்ததனுல் ஆகிய பயன் என்ற கொள்கை உடைய சிறந்த அடியார்கள், அரம்பை முதலிய தேவ மகளிர் ஆடவும் பாடவும் அவற்றைக் கண்டு களித்துக் கற்பகச் சோலேயில் பொற்கட்டில் இனிதாகத் தங்குவார்களோ? (இந்திர பதவியும் வேண்டாது பாத சேவையிலேயே மனம் லயித்து இருப்பார்கள்; அம்பிகையின் பாதமே யாவும் ஆதலால்.)

75. தங்குவர் கற்பகத் தருவின்
நீழலில் தாயரின் றி
மங்குவர் மண்ணில் வழுவாப்
பிறவியை மால்வரையும்
பொங்குவர் ஆழியும் ஈரேழ்
புவனமும் பூத்தஉந்திக்
கொங்கிவர் பூங்குழ லாள்திரு
மேனி குறித்தவரே.

பெரிய மலைகளையும் உப்புக் கடலையும் பதினுன்கு உலகங்களையும் பெற்ற திருவயிற்றையும் மணமிக்க மலர்களை முடித்த கூந்தலையும் உடைய அபிராமி தேவியின் திருமேனியை தியானித்தவர்கள் கற்பக நீழலில் தங்கியின்பமாய் இருப்பார்கள் ; இடைவிடாத பிறவியை, பெறுகின்ற தாயாரில்லாமற் செய்து வேரறுப்பார்கள்.



76. குறித்தேன் மனத்தில்நின் கோலம்எல்
லாம்நின் குறிப்பறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற
நேர்வழி வண்டுகிண்டி
வெறித்தேன் அவிழ்கொன்றை வேணிப்
பிரான்ஒரு கூற்றை மெய்யில்
பறித்தே குடிபுகு தும்பஞ்ச
பாண பயிரவியே.

வண்டு குடைந்து மணமிகு தேன்சொறியும் கொன்றை மாலையணிந்த சடைமுடியுடைய சிவபிரான்றன் ஒரு பாகத்தைப் பறித்து அதில் குடியாய்ப் புகுந்த பஞ்சபாணங்களையுடைய பைரவியாகிய அபிராமித் தாயே! நினது திருக்கோலம் யாவற்றையும் என் மனதில் குறித்துத் தியானிக்கின்றேன்; நின் திருவுள்ளக் குறிப்பறிந்து இயமன் வரும் நேர்வழி இன்னதென்றுணர்ந்து அவன் வாராமல் தடுத்து விட்டேன்.

77. பயிரவி பஞ்சமி பாசாங்
குசைபஞ்ச பாணிவஞ்சர்
உயிரவி உண்ணும் உயர்சண்டி
காளி ஒளிரும்கலா
வயிரவி மண்டலி மாலினி
சூலி வராகி யென்றே
செயிரவி நான்மறை சேர்திரு
நாமங்கள் செப்புவரே.

அபிராமி தேவியே! நின் அடியார்கள் நினது குற்றமற்ற வேதங்களில் பயின்ற திருநாமங்களாகிய பைரவி, பஞ்சமி, பாசாங்குசை, பஞ்சபாணி, வஞ்சகம் உடையவர்களது உயிரைப் பலியாகக் கொள்ளும் சண்டி, காளி, ஒளி வீசும் கலை வீறுடைய வயிரவி, சூரிய சந்திரமண்டலங்களில் வாழும் மண்டலி, கடம்ப மாலையை அணிந்த மாலினி, சூலி, வராகி என்ற பெயர்களையெல்லாம் மீண்டும் மீண்டும் சொல்லிப் போற்றித் துதிப்பார்கள்.



78. செப்பும் கனக கலசமும்
போலும் திருமுலைமேல்
அப்பும் களப அபிராம
வல்லி அணிதரளக்
கொப்பும் வயிரக் குழையும்
விழியின் கொழுங்கடையும்
துப்பும் நிலவும் எழுதிவைத்
தேன்என் துணைவிழிக்கே.

மாணிக்கச் செப்பு போலவும் தங்கக் கலசம் போலவும் விளங்குகின்ற மார்பகங்களில் பூசும் சிறந்த மணமுடைய சந்தனக் கலவைகள் விளங்குகின்ற அபிராமவல்லித் தாயே! என் இருவிழிகளிலும் எங்கு நோக்கினும் நின் திருவுருவே தோன்றுமாறு நினது முத்துக் கொப்பு, வயிரக் குழை, மதர்த்த கருணைமிகு கடைக்கண்கள், பவழம் போலும் திருவாய், புன்முறுவலாகிய நிலா ஆகியவற்றை எழுதி வைத்தேன். (எப்போதும் கண்களில் தோன்றுமாறு தியானிக்கிறேன்.)

79. விழிக்கே அருளுண்(டு) அபிராம
வல்லிக்கு வேதம்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண்(டு)
எமக்(கு)அவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்றுவெம் பாவங்க
ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர்தம்
மோடென்ன கூட்டினியே.

அபிராம வல்லியம்மைக்குத் திருக்கண்களில் கருணை உண்டு; வேதம் விதித்த வழியில் அத்தேவியைப் போற்றித் துதிக்க மனமும் உண்டு; அத்தகைய சிறப்பு எமக்கு இருக்க பழியும் பாவமும் விளைக்கும் செயல்களைச் செய்து வருந்திப் பாழ்நரகக் குழியில் அழுந்தி வாடும் பேதையர்களோடு இனி நமக்கென்ன தொடர்பு? [தொடர்பு நல்லதல்ல.]



80. கூட்டிய வாஎன்னைத் தன்னடி
யாரில் கொடியவினை
ஓட்டிய வாஎன்கண் ஓடிய
வாதன்னை உள்ளவண்ணம்
காட்டிய வாகண்ட கண்ணும்
மனமும் களிக்கின்றவா
ஆட்டிய வாநடம் ஆடகத்
தாமரை ஆரணங்கே.

பொற்றாமரைப் பூவில் பொருந்தி வாழும் அரிய அழகு வாய்ந்த அபிராமி தேவியே! என்னை நின் அடியார் கூட்டத்துள் சேர்த்தது வியப்பு; நான் செய்த கொடிய வினைகளை ஒழித்தது வியப்பு; ஒன்றுக்கும் பற்றாத எனக்கு உன் உண்மை உருவை உள்ளபடி கண்களுக்குத் தெரியும்படிக் காட்டியது வியப்பு; நின்னை கண்ட கண்ணும் மனமும் பெருமகிழ்ச்சியில் திளைக்கின்றனவே; இவ்வாறெல்லாம் என்னை நாடகம் ஆடச் செய்தனையே. நின் தண்ணளியை என்னென்பேன்.

81. அணங்கே அணங்குகள் நின்பரி
வாரங்கள் ஆகையினால்
வணங்கேன் ஒருவரை வாழ்த்துகி
லேன்நெஞ்சில் வஞ்சகரோ(டு)
இணங்கேன் என(து) உன(து)
என்றிருப்பார்சிலர் யாவரொடும்
பிணங்கேன் அறிவொன் றி லேன்என்
கண்ணீவைத்த பேரளியே.

அபிராமித் தாயே! மற்ற சக்திகள் நின் பரிவார தேவதைகள் ஆதலினால் அவர்களை வணங்கமாட்டேன்; ஒருவரையும் போற்றவும் மாட்டேன்; என்னிடம் நீ வைத்த பெருங்கருணையால் நெஞ்சத்தில் கள்ளம் கொண்டவருடன் இணங்கமாட்டேன்; நான் அறிவற்றவனாயினும் 'என் பொருளெல்லாம் நின் பொருளே' என்றிருக்கும் சில ஞானிகளுடன் பிணங்காது இணங்கி உறவாடுவேன்.



82. அளியார் கமலத்தில் ஆரணங்
கேஅகி லாண்டமும்நின்
ஒளியாக நின்ற ஒளிர்திரு
மேனியை உள்ளுதொறும்
களியாகி அந்தக் கரணங்கள்
விம்மிக் கரைபுரண்டு
வெளியாய் விடின்எங்ங னேமறப்
பேன்நின் விரகினையே.

வண்டுகள் மொய்க்கும் கமலத்தில் வாழும் அபிராமி தேவியே! எல்லாவுலகும் நின்றன் ஒளியாக விளங்கப் பேரொளி வீசும் நின் திருமேனியின் பேரெழிலை நினைக்கும்தோறும் களிப்பின் மிகுதியால் அந்தக்கரணங்கள் பொருமித் துள்ளிக் கரைகடந்து பரவெளியில் ஒன்றி நிற்கின்றன; இவ்வாறு பேரருள் காட்டி இயற்றிய நின் உபாயத்தை யான் எவ்வாறு மறப்பேன்? (ஒருபோதும் மறக்க மாட்டேன்.)

83. விரவும் புதுமலர் இட்டுநின்
பாத விரைக்கமலம்
இரவும் பகலும் இறைஞ்சவல்
லார்இமை யோர்எவரும்
பரவும் பதமும் அயிரா
வதமும் பகீரதியும்
உரவும் குலிசமும் கற்பகக்
காவும் உடையவரே.

அபிராமித் தாயே! நின் வாசமிகு திருவடித் தாமரைகளில் தேன் கொழிக்கும் புது மலர் இட்டு அருச்சித்து இரவு பகலுமாகத் தியானம் செய்ய வல்ல பெரியோர்கள், தேவர்கள் யாவரும் போற்றும் இந்திர பதவியும் அயிராவதம் என்ற யானையும் ஆகாய கங்கையும் வலிய வச்சிராயுதமும் கற்பகச் சோலையும் தமக்குரியன வாகப் பெற்று வாழ்வர்.



84. உடையாளை ஒல்கு செம்பட்டு
உடையாளை ஒளிர்மதிசெஞ்
சடையாளை வஞ்சகர் நெஞ்சடை
யாளைத் தயங்குநுண் ணூல்
இடையாளை எங்கள்பெம் மானிடை
யாளைஇங்(கு) என்னை இனிப்
படையாளை உங்களை யும்படை
யாவண்ணம் பார்த்திருமே.

அபிராமி தேவி என்னைப் பண்டே அடிமை கொண்டவள்; இடையில் ஒசிந்து நிற்கும் செம்பட்டை உடுத்திருப்பவள்; ஒளி வீசும் பிறைச்சந்திரனைச் சடைமீது கொண்டவள்; வஞ்சகர்களின் நெஞ்சில் ஒரு போதும் சேராள்; ஒளி விளங்குகின்ற நுண்ணிய நூல் போலும் இடையை உடையவள்; எம்பெருமானாகிய சிவ பிரானின் இடப் பாகமே குடிகொண்டவள்; இனி என்னை இவ்வுல கில் பிறக்குமாறு படைக்கமாட்டாள்; அத்தகைய தேவியைத் தொழுது போற்றி உங்களையும் மீண்டும் படைக்காதிருக்கும் பொருட்டு அவளைக் குறித்துத் தியானம் செய்யுங்கள்.

85. பார்க்கும் திசைதொறும் பாசாங்
குசமும் பனிச்சிறைவண்(டு)
ஆர்க்கும் புதுமலர் ஐந்தும்
கரும்பும்என் அல்லல்எல்லாம்
தீர்க்கும் திரிபுரை யாள்திரு
மேனியும் சிற்றிடையும்
வார்க்குங் குமமுலை யும்முலை
மேல்முத்து மாலையுமே.

அபிராமித் தாயே! நான் பார்க்கும் திசைகள் தோறும் நின் படைகளாகிய பாசமும் அங்குசமும் வண்டு பொதுளும் மலரம்புகள் ஐந்தும் கருப்பு வில்லும் என் துன்பங்கள் யாவற்றையும் போக்கும் திரிபுரையாகிய நின் திருமேனிப் பேரெழிலும் சிற்றிடையும் கச்சணிந்த குங்குமக் குழம்பு மணக்கும் மார்பகங்களும் அவற்றின் மேலே முத்துமாலையுமே தோன்றுகின்றன. [பார்க்கும் பொருளெலாம் தேவியே என்ற பக்குவம் பெற்றபடி.]



86. மாலயன் தேட மறைதேட
வானவர் தேடநின்ற
காலையும் சூடகக் கையையும்
கொண்டு கதித்தகப்பு
வேலைவெங் காலன்என் மேல்விடும்
போது வெளிநில்கண்டாய்
பாலையும் தேனையும் பாகையும்
போலும் பணிமொழியே.

பால், தேன், பாகு ஆகியவைகளைப் போல மிக இனிய மென்மையான மொழி பேசும் அபிராமித் தாயே! யமன் கோபித்துக் கிளையாகப் பிரிந்து நிற்கும் வேலை என்மேல் விடும்போது திருமாலும் பிரமனும் வேதங்களும் மற்றை வானவர்களும் தேடியும் காணாத திருப்பாதங்களையும், சங்கமணிந்த கையையும் கொண்டு எனக்குக் காட்சி தந்தருளவேண்டும்.

87. மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத
நின் திரு மூர்த்திஎன் றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்ற
தால்விழி யால்மதனை
அழிக்கும் தலைவர் அழியா
விரதத்தை அண்டமெல்லாம்
பழிக்கும் படியொரு பாகம்கொண்
டாளும் பராபரையே.

நெற்றிக் கண்ணுல் காமனை எரித்த எம்பிரானுகிய சிவபிரானது அழிக்க முடியாத யோக விரதத்தை எவ்வுலகத்தவரும் பழிக்குமாறு அவரது இடப்பாகத்தில் இடங்கொண்டு ஆளும் அபிராமி தேவியே! வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத நின் திருவுருவம் என்னுடைய கண்களுக்கும் செய்த பூசனைக்கும் வெளிப்பட்டுத் தோன்றிக் காட்சியளிக்கின்றதே. (இஃதொரு வியப்பன்றோ?)



88. பரமென்று உனையடைந் தேன்தமி
யேனும்உன் பத்தருக்குள்
தரமன்று இவன்என்று தள்ளத்
தகாது தரியலர்தம்
புரம்அன்று எரியப் பொருப்புவில்
வாங்கிய போதில்அயன்
சிரம்ஒன் று செற்றகை யான்இடப்
பாகம் சிறந்தவளே.

பகைவர்களது முப்புரமும் நீறுபட்டு அழியுமாறு மேரு மலையை வில்லாக வளைத்தவரும் தாமரை மலரில் வாழும் பிரம தேவனுடைய தலையொன்றைக் கிள்ளி அழித்தவரும் ஆகிய சிவபிரான்றன் இடப்பாகத்தில் சிறந்து வீற்றிருக்கும் அபிராமி தேவியே! யாரும் துணையற்ற யான் 'நீயே கதி' என்று உன்னை அடைக்கலமாக அடைந்தேன்; என்னைத் தகுதியற்றவன் என்று ஒதுக்கிவிடாமல் அருளவேண்டும்; ஒதுக்கிவிடுதல் நின் அருட்கு இழுக்கு ஆகும்.

89. சிறக்கும் கமலத் திருவேநின்
சேவடி சென்னிவைக்கத்
துறக்கம் தரும்நின் துணைவரும்
நீயும் துரியம்அற்ற
உறக்கம் தரவந்(து) உடம்போ(டு)
உயிர்உற வற்றறிவு
மறக்கும் பொழுதென்முன் னேவரல்
வேண்டும் வருந்தியுமே.

சிறந்த தாமரையில் திருவாய் வீற்றிருக்கும் அபிராமி தேவியே! நான் உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பற்று அறிவு மறதி மிகும்போது நினது சேவடியைச் சென்னியில் வைத் தற்பொருட்டு அதற்கு அனுகூலமாகப் பற்றின்மையை அனுக்கிர ஹிக்கும் நின் துணைவரும் நீயும் துரியாதீத நிலையில் அறிதுயி லில் யான் அமரும் பேற்றையருள வருந்தியேனும் எனக்குக் காட்சியளித்தருள வேண்டும்.



90. வருந்தா வகைஎன் மனத்தா
மரையினில் வந்துபுகுந்(து)
இருந்தாள் பழைய இருப்பிட
மாக இனிஎனக்குப்
பொருந்தா தொருபொருள்
இல்லைவிண் மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தா
னதைநல்கும் மெல்லியலே.

பாற்கடலில் தோன்றிய அமிர்தத்தைத் திருமால் தேவர் கட்குக் கொடுக்க மூல காரணமாக இருந்த அபிராமி தேவி, யான் பிறந்தும் இறந்தும் வருந்தாமல் என் உள்ளத்தாமரையில் எழுந் தருளித் தன் பழைய உறைவிடமே போல எண்ணி உறைந்தருளி னாள்; ஆகையால் இனி எனக்கு வாய்க்காத பொருள் ஏதும் இவ் வுலகில் இல்லை.

91. மெல்லிய நுண்ணிடை மின்அனை
யாளை விரிசடையோன்
புல்லிய மென்முலை பொன்அனை
யாளைப் புகழ்ந்துமறை
சொல்லிய வண்ணம் தொழும்அடி
யாரைத் தொழுமவர்க்குப்
பல்லியம் ஆர்த்தெழ வெண்பக(டு)
ஊரும் பதம்தருமே.

அபிராமி தேவியின் மின்னல் போலும் மெல்லிய மருங்கினை உடையவள்; விரிந்த சடைமுடியுடைய சிவபிரானுடன் இணைந்து நிற்கும் பொன்னிறமிகுந்த மார்பகங்களை உடையவள்; அத்தகைய அம்பிகையை வேத விதிப்படித் தொழும் அடியார்க்கும் அடியவர்கள், பல்வகை இசைக்கருவிகளும் இனிது முழங்கியோங்க வெள்ளையானையாகிய ஐராவதத்தின்மீது ஊர்ந்து செல்லும் சிறந்த இந்திர பதவியைப் பெறுவார்கள்.



92. பதத்தே உருகிநின் பாதத்தி
லேமனம் பற்றிஉன்றன்
இதத்தே ஒழுக அடிமைகொண்
டாய்இனி யான்ஒருவர்
மதத்தே மதிமயங் கேன்அவர்
போனவழியும் செல்லேன்
முதத்தேவர் மூவரும் யாவரும்
போற்றும் முகிழ்நகையே.

தலைவர்கள் எனப்படும் திரிமூர்த்திகளும் மற்றுமுள்ள தேவர்களும் போற்றித் துதிக்கின்ற புன்முறுவல் பூக்கும் அபிராமி தேவியே! என் மனம் பரிபாகம் பெற்று நெக்குருகி நின் பாதங்களிலேயே பற்றுமிக்கு நின் திருவருள் ஆணைப்படியே ஒழுகுமாறு என்னைத் தொண்டாக ஆக்கிக்கொண்டாய். ஆகவே, இனி நான் மற்றொருவருடைய மதத்தின் சிறப்பு கண்டு மயங்கமாட்டேன்; அவர்கள் செல்லும் வழியிலும் செல்ல மாட்டேன்.

93. நகையே இஃதிந்த ஞாலமெல்
லாம்பெற்ற நாயகிக்கு
முகையே முகிழ்முலை மானே
முதுகண் முடிவில்அந்த
வகையே பிறவியும் வம்பே
மலைகள் என்பதுநாம்
மிகையே இவள்தன் தகைமையை
நாடி விரும்புவதே.

உலகமெல்லாம் பெற்றெடுத்த தலைவியாகிய அபிராமி யம்மைக்கு ஒளிமிக்க மார்பகங்கள் தாமரைமொக்கு எனவும், கருணை ததும்பி முதிர்ந்த கண்கள் மருட்சிமிக்க மான்கண்கள் எனவும், முடிவு இல்லை எனவும் அவ்வாறே பிறப்பும் இல்லை எனவும் கவிஞர்கள் கூறுகின்றனர். அஃதேயெனின் அந்த அம்பிகையை மலையரசன் மகள் எனக் கூறுதல் பொருந்தாது; இவையெல்லாம் ஒன்றற்கொன்று மாறுபட்ட கூற்றுகள். இக்கூற்றுகளை எண்ணும்போது பரிகாசச் சிரிப்பே உண்டாகின்றது. நாம் இனி விரும்பத்தக்கது இத்தகைய கற்பனைகளை உதறித் தள்ளி அம்பிகையின் உண்மை நிலையை ஆராய்ந்து போற்றுவதேயாகும்.



94. விரும்பித் தொழும்அடி யார்விழி
நீர்மல்கி மெய்புளகம்
அரும்பித் ததும்பிய ஆனந்த
மாகி அறிவிழந்து
சுரும்பிற் களித்து மொழிதடு
மாறிமுன் சொன்னஎல்லாம்
தரும்பித்தர் ஆவரென் றால்அபி
ராமி சமயம்நன்றே.

அபிராமிதேவியைப் போற்றித் தொழும் அடியவர்கள் தம் கண்களில் நீர் பெருகி உடலில் புளகம் போர்த்து ஆனந்தம் ததும்பி அறிவு மறந்து வண்டைப்போற் களித்து சொல்லும் தடுமாறி முன் சொல்லிய யாவற்றையும் தருகின்ற பித்தரைப் போலும் தோற்ற மளிப்பர் என்றால் அத்தகைய பேரானந்தப் பெரும் பேற்றுக்குக் காரணமான அம்பிகையின் சமயமே சாலவும் சிறந்ததாகும்.

95. நன்றே வருகினும் தீதே
விளைகினும் நான் அறிவ(து)
ஒன்றேயு மில்லை உனக்கே
பரம்எனக்(கு) உள்ளஎல்லாம்
அன்றே உனதென்(று) அளித்துவிட்
டேன் அழி யாதகுணக்
குன்றே அருட்கட லேஇம
வான்பெற்ற கோமளமே.

அழியாத குணக்குன்றே! அருட்கடலே! இமவான் பெற்றெடுத்த இளமைமிகு அபிராமி தேவியே! எனக்குரிமை என்று கருதியிருந்த பொருள்களனைத்தையும் அன்றே உன்னுடையது என்று கொடுத்துவிட்டேன்; இனி நல்லதே வந்தாலும் தீயதே கிடைத்தாலும் நான் உணரத்தக்கது ஒன்றும் இல்லை. நான் உனக்கே பாரம்.



96. கோமள வல்லியை அல்லியந்
தாமரைக் கோயில்வைகும்
யாமள வல்லியை ஏதம்
இலாளை எழுதரிய
சாமள மேனிச் சகலக
லாமயில் தன்னைத்தம்மால்
ஆமள வும்தொழு வார்எழு
பாருக்கும் ஆதிபரே.

அபிராமி தேவி அழகும் இளமையும் மிக்க கோமளவல்லி; மென்மையான தாமரையைக் கோயிலாகக் கொண்டு வீற்றிருக்கும் யாமளை; குற்றமற்றவள்; படத்தில் எழுதமுடியாத பசிய எழில் மிகு திருமேனி உடையவள்; சகல கலைகளிலும் வல்ல மயில் போன்றவள்; அத்தகைய அம்பிகையைத் தம்மால் முடிந்த அளவும் தொழுபவர்கள் ஏழுலகுக்கும் தலைவராவர்.

97. ஆதித்தன் அம்புலி அங்கி
குபேரன் அமரர்தங்கோன்
போதிற் பிரமன் புராரி
முராரி பொதியமுனி
காதிப் பொருபடைக் கந்தன்
கணபதி காமன்முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர்
போற்றுவர் தையலையே.

புண்ணியம் பல இயற்றி அவற்றின் பயனைத் தமக்கு உரிமை யாக்கிக்கொண்ட சூரியன், சந்திரன், அக்கினி, குபேரன், இந்திரன், மலரில் வாழும் பிரமன், முப்புரங்களை எரித்த சிவபிரான், முரனை யொறுத்த திருமால், அகத்தியன், கொன்று போர்புரியும் வேலை யுடைய கந்தன், கணபதி, மன்மதன் முதலிய எண்ணற்றவர் எம் அபிராமி தேவியைப் போற்றித் துதிப்பர்.



98. தைவந்து நின்னடித் தாமரை
சூடிய சங்கரற்குக்
கைவந்த தீயும் தலைவந்த
ஆறும் கரந்ததெங்கே
மெய்வந்த நெஞ்சின் அல் லால்ஒரு
காலும் விரகர் தங்கள்
பொயவந்த நெஞ்சில் புகஅறி
யாமடப் பூங்குயிலே.

உண்மை பொருந்திய நெஞ்சில் அல்லாமல் வஞ்சகர்களுடைய பொய்மிகுந்த மனத்தில் ஒருபோதும் புக அறியாத இளமைமிகு பூங்குயில்போன்ற அபிராமித் தாயே! நின் பாதபத்மங்களை வருடித் தன் தலையிற் சூடிக்கொண்ட எம்பிரானாகிய சங்கரற்குக் கையில் இருந்த தீயும் தலையிற் குடியிருந்த கங்கையும் எங்கே ஒளித்துக் கொண்டனவோ!

**99.** குயிலாய் இருக்கும் கடம்பா
டவியிடைக் கோலஇயல்
மயிலாய் இருக்கும் இமயா
சலத்திடை வந்துதித்த
வெயிலாய் இருக்கும் விசும்பில்
கமலத்தின் மீதன்னமாம்
கயிலா யருக்(கு)அன்(று) இமவான்
அளித்த கனங்குழையே.

கயிலையங்கிரித் தலைவனுகிய சிவபிரானுக்கு அன்று இமவான் திருமணம் செய்து கொடுத்த உமையாகிய அபிராமி தேவி, கடம்ப வனத்தில் (மதுரையில்) குயிலாய் இருப்பாள்; இமயமலையில் மயிலாய் இருப்பாள்; விண்ணில் (சிதம்பரத்தில்) உதய (ஞான) சூரியனுய் இருப்பாள்; தாமரையின்மீது (மூலாதாரத் தானமாகிய திருவாரூரில்) அன்னமாய் இருப்பாள்.



**100.** குழையைத் தழுவிய கொன்றையந்
தார்கமழ் கொங்கைவல்லி
கழையைப் பொருத திருநெடுந்
தோளும் கருப்புவில்லும்
விழையப் பொருதிறல் வேரியம்
பாணமும் வெண்ணகையும்
உழையைப் பொருகண்ணும்
நெஞ்சில்எப் போதும் உதிக்கின்றவே.

இளந்தழையும் கொன்றை மலரும் இணைத்துத் தொடுத்த மாலையின் மணம் கமழும் மார்பகங்களையுடைய அபிராமி அம்மையின் மூங்கில்போலும் பசிய தோள்களும் கருப்பு வில்லும் ஒருவரையொருவர் விரும்புமாறு செய்யும் வாசனைமிக்க மலரம்புகளும் வெண்ணிறம் காட்டும் புன்னகையும் மானையொத்த மருண்ட கண்களும் என் மனத்தில் எப்போதும் தோன்றுகின்றன. (எப்போதும் அம்பிகையின் திருமேனிப் பேரெழிலைத் தியானம் செய்து கொண்டிருக்கிறேன்.)

## நூல் பயன்

ஆத்தாளை எங்கள் அபிராம
　　வல்லியை அண்டம்எல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத்
　　தாளைப் புவிஅடங்கக்
காத்தாளை ஐங்கணை பாசாங்
　　குசமும் கரும்பும்அங்கை
சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழு
　　வார்க்(கு)ஒரு தீங்கில்லையே.

அபிராமவல்லி எங்கள் தாய்; எல்லா அண்டங்களையும் பெற்றெடுத்தவள்; மாதுளம்பூப் போலும் நிறமுடையவள்; உலகமெல்லாம் காப்பவள்; அழகிய கைகளில் பஞ்சபாணங்களையும் பாசத்தையும் அங்குசத்தையும் கரும்புவில்லையும் வைத்திருப்பவள்; மூன்று கண்களையுடையவள்; அந்த அம்பிகையைத் தொழுபவர்க்கு ஒரு தீங்கும் உண்டாகாது.



## ஸ்ரீ அபிராமி அந்தாதியும் ஸகலகார்ய ஸித்தியும்

அபிராமி அந்தாதிப் பாசுரங்களைப் பாராயணம் செய்வோர் அடையும் பயன்கள் அனந்தம். ஒவ்வொரு பாசுரமும் ஒவ்வொரு குறிப்பிட்ட பலனைத் தரும் வகையில் மூல அக்ஷரங்களால் அமைக்கப்பெற்றது. ஆகவே, பலனைக் கருதிப் படிப்பவர்களின் உதவிக்காக ஒவ்வொரு பாசுரமும் கருதிய பலன் இன்னதென அட்டவணையிட்டுக் காட்டப்பெற்றிருக்கின்றது.

| பாசுர எண் | பலன் |
|---|---|
| 1. | நல்வித்தையும் ஞானமும் பெற. |
| 2. | பிரிந்தவர் ஒன்று சேர. |
| 3. | ஸம்ஸார பந்தம் நீங்க. |
| 4. | உயர்பதவிகள் அடைய. |
| 5. | மனவியாகூலம் தீர. |
| 6. | மந்திரசித்தி பெற. |
| 7. | மலையென வருந்துன்பம் பனியென நீங்க. |
| 8. | சகல பாசமும் நீங்கித் துறவறம் சித்திக்க. |
| 9. | ஸர்வ வசியம் உண்டாக. |
| 10. | மோக்ஷ சாதனம் பெற. |
| 11. | இல்வாழ்க்கையில் இன்பம் பெற. |
| 12. | நெஞ்சம் தியானத்தில் நிலைபேறு அடைய. |
| 13. | வைராக்கிய நிலை எய்த. |
| 14. | தலைமை பெற. |
| 15. | பெருஞ்செல்வமும் பேரின்பமும் பெற. |
| 16. | முக்காலமும் உணரும் ஆற்றல் உண்டாக. |
| 17. | கன்னிகைகளுக்கு நல்ல வரன் கிடைக்க. |
| 18. | மரணபயம் நீங்க. |
| 19. | பேரின்பம் உண்டாக. |
| 20. | வீடுவாசல் முதலிய செல்வங்கள் உண்டாக. |
| 21. | அம்பிகைக்குச் செய்த அபசார தோஷம் நீங்க. |
| 22. | பிறவிப் பிணி தீர. |
| 23. | மனச் சஞ்சலம் உண்டாகாதிருக்க. |
| 24. | தீராத வியாதிகள் தீர. |
| 25. | நினைத்த காரியம் இடையூறின்றி ஈடேற. |
| 26. | சொல்வன்மையும் செல்வாக்கும் பெருக. |

| பாசுர எண் | பலன் |
|---|---|
| 27. | மனநோய் தீர. |
| 28. | இகபர சுகங்களைப் பெற. |
| 29. | அணிமாதி அஷ்ட சித்திகளைப் பெற. |
| 30. | அடுத்தடுத்து வரும் ஆபத்துக்கள் நீங்க. |
| 31. | மறுமையில் இன்பம் உண்டாக. |
| 32. | அகால மரணமும் துர்மரணமும் உண்டாகாதிருக்க. |
| 33. | மரணாவஸ்தையிலும் அம்பிகையின் நினைவு அகலாதிருக்க. |
| 34. | பயிர் செய்ய ஏற்ற சிறந்த நிலபுலன்கள் கிடைக்க. |
| 35. | கடிமணம் நிகழ. |
| 36. | தொல்வினைகள் தொலைந்து போக. |
| 37. | நவரத்தின ப்ராப்தி உண்டாக. |
| 38. | வேண்டிய பொருளை வேண்டியபடியே அடைய. |
| 39. | அஸ்திர வித்தையில் தேர்ச்சி பெற. |
| 40. | பூர்வ புண்ணியம் தடையின்றிப் பலன் தர. |
| 41. | ஸத்ஸங்கம் உண்டாக. |
| 42. | உலகம் நமக்கு வசியப்பட்டிருக்க. |
| 43. | தீமையெல்லாம் ஒழிய. |
| 44. | பேதபுத்தி நீங்க. |
| 45. | உலக அபவாதம் நீங்க. |
| 46. | எல்லாவிதமான நடத்தை தோஷங்களும் தீர. |
| 47. | யோகசித்தி பெற. |
| 48. | சரீரப் பற்று நீங்க. |
| 49. | மரணாவஸ்தை இல்லாது ஒழிய. |
| 50. | அம்பிகையை நேரில் தரிசிக்க. |
| 51. | மோகம் நீங்க. |
| 52. | இம்மையில் பெருஞ்செல்வம் உண்டாக. |
| 53. | மாயை அகல. |
| 54. | கடன் தொல்லைகள் தீர. |
| 55. | விருப்பு வெறுப்பற்ற மோனநிலை எய்த. |
| 56. | யாவரையும் வசீகரிக்கும் ஆற்றல் உண்டாக. |
| 57. | வறுமை ஒழிய. |
| 58. | பரிபாகம் பெற்ற மன அமைதி உண்டாக. |
| 59. | துர்நடத்தை உள்ள பிள்ளை நல்லவனாக. |
| 60. | மெய்யுணர்வு தோன்ற. |
| 61. | மாயை அகன்று உண்மை உணர்வு உண்டாக. |
| 62. | எத்தகைய அச்சமும் அகல. |
| 63. | நல்லறிவு உண்டாக. |
| 64. | பக்தி பெருக. |
| 65. | புத்திர பாக்கியம் உண்டாக. |
| 66. | கவிபாடும் ஆற்றல் பெற. |
| 67. | பகைவர்கள் அழிய. |

| பாசுர எண் | பலன் |
|---|---|
| 68. | நிலம், நீர், வீடு, வாசல், தோட்டம் போன்ற செல்வங்கள் [பெருக. |
| 69. | ஸகல ஸௌபாக்யங்களும் உண்டாக. |
| 70. | ஸங்கீதம் ஓவியம் முதலிய கலைகளில் வல்லமை பெற. |
| 71. | மனக்குறை தீர்ந்து மகிழ்ச்சி பெருக. |
| 72. | பிறவிப்பிணி தீர. |
| 73. | பெண்களுக்கு கர்ப்ப ப்ராப்தி உண்டாக. |
| 74. | செய்தொழிலில் தலைமை எய்த. |
| 75. | வலிமை மிக்க விதியையும் வெல்ல. |
| 76. | தனக்குரிய பொருள் தப்பாமல் வந்துசேர. |
| 77. | பகைவர்களால் உண்டாகும் அச்சம் நீங்க. |
| 78. | ஸகல போக ஸௌக்யங்களும் உண்டாக. |
| 79. | ஸர்வ ஸங்க பரித்யாகம் உண்டாக. |
| 80. | நிலையான மனமகிழ்ச்சி உண்டாக. |
| 81. | நன்னடத்தை உண்டாக. |
| 82. | கவனசக்தி பெருக. |
| 83. | ஏவலர் பலர் உளராக. |
| 84. | தர்மசங்கட (இக்கட்டான) நிலைமைகள் நீங்க. |
| 85. | ஸோஹம் பாவனை உண்டாக. |
| 86. | ஆயுதங்களால் உண்டாகும் அச்சம் நீங்க. |
| 87. | செயற்கரிய செயல்களைச் செய்து புகழ்பெற. |
| 88. | அம்பிகையின் அருள் எப்போதும் கிடைக்க. |
| 89. | யோகசித்தி பெற. |
| 90. | மனக்கசப்பால் பிரிந்த தம்பதிகள் மனம் ஒன்றி [மகிழ்ந்து கூட. |
| 91. | அரசாங்கக் காரியங்களில் வெற்றி உண்டாக. |
| 92. | மனப்பக்குவம் உண்டாக. |
| 93. | உள்ளத்தே உண்மை ஒளி உண்டாக. |
| 94. | பைத்தியம் தெளிய. |
| 95. | ஸர்வ பரித்யாகம் செய்யும் பக்குவம் உண்டாக. |
| 96. | எங்கும் தலைமையும் புகழும் பெற. |
| 97. | புகழும் தர்மமும் வளர. |
| 98. | வஞ்சகர் செயலால் வருத்தம் உண்டாகாதிருக்க. |
| 99. | அருள் என்னும் தன்மை வளர. |
| 100. | அம்பிகையின் சொரூபத்தை அகத்தே எப்போதும் காண. |



திருக்கடவூர்

# அபிராமியம்மை பதிகம்

### காப்பு

தூயதமிழ்ப் பாமாலை சூட்டுதற்கு மும்மதநால்
வாயைங் கரன்ருள் வழுத்துவாம்--நேயர்நிதம்
எண்ணும் புகழ்க்கடவூர் எங்கள்அபி ராமவல்லி
நண்ணும் பொற்பாதத்தில் நன்கு.

### நூல்

### ஆசிரிய விருத்தம்

கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவா ராத நட்பும்
கன்ருத வளமையும் குன்ருத இளமையும்
கழுபிணியி லாத உடலும்
சலியாத மனமும்அன் பகலாத மனைவியும்
தவருத சந்தா னமும்
தாழாத கீர்த்தியும் மாருத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணுத கோலுமொரு
துன்பமில் லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும்உத விப்பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்;
அலையாழி அறிதுயிலு மாயனது தங்கையே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 1

காரளக பந்தியும் பந்தியின் அலங்கலும்
கரிய புருவச் சிலைகளும்
கர்ணகுண் டலமுமதி முகமண் டலம்நுதற்
கத்தூரிப் பொட்டு மிட்டுக்

கூரணிந் திடுவிழியும் அமுதமொழியுஞ் சிறிய
கொவ்வையின் கனிய தரமும்
குமிழனைய நாசியும் முத்தநிகர் தந்தமும்
கோடுசோ டான களமும்
வாரணிந் திறுமாந்த வனமுலையும் மேகலையும்
மணிநூ புரப்பா தமும்
வந்தெனது முன்னின்று மந்தகா சமுமாக
வல்வினையை மாற்று வாயே;
ஆரமணி வானிலுறை தாரகைகள் போலநிறை
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 2

மகரவார் குழல்மேல் அடர்ந்து குமிழ் மீதினில்
மறைந்து வாளைத் துறந்து
மைக்கயலை வேண்டிநின் செங்கமல விழியருள்
வரம்பெற்ற பேர்க ளன்றோ?
செகமுழுதுமீ வொற்றைத் தனிக்குடை கவித்துமே ற்
சிங்கா தனத்தி லுற்றுச்
செங்கோலும் மனுநீதி முறைமையும் பெற்றுமிகு
திகிரியுல காண்டு பின்பு
புகர்முகத்(து) ஐராவதப் பாக ராகிநிரை
புத்தேளிர் வந்து போற்றிப்
போக தேவேந்திரன் எனப்புகழ விண்ணில்
புலோமசை யொடுஞ்சு கிப்பர்;
அகரமுத லாகிவளர் ஆனந்த ரூபியே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 3

மறிகடல்கள் ஏழையுந் திகிரிஇரு நான்கையும்
மாதிறல் கரியெட் டையும்
மாநாகம் ஆனதையும் மாமேரு என்பதையும்
மாகூர்மம் ஆனதையு மோர்
பொறியரவு தாங்கிவரு புவனமீ ரேழையும்
புத்தேளிர் கூட்டத் தையும்
பூமகளை யுந்திகிரி மாயவனை யும்அரையிற்
புலியாடை உடையா னையும்
முறைமுறைக ளாயீன்ற முதியவர்களாய்ப் பழைமை
முறைகள் தெரியாத நின்னை
மூவுலகி லுள்ளவர்கள் வாலையென்(று) அறியாமல்
மொழிகின்ற தேது சொல்வாய்;

 RRTTME : ERLX

அறிவுநிறை விழுமியர்தம் ஆனந்த வாரியே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 4

வாடாமல் உயிரெனும் பயிர்தழைத் தோங்கிவர
அருள்மழை பொழிந்தும் இன்ப
வாரிதியிலே நின்ன தன்பெனுஞ் சிறகால்
வருந்தா மலேய ணைத்துக்
கோடாமல் வளர்சிற் றெறும்புமுதல் குஞ்சரக்
கூட்டமுத லான சீவ
கோடிகள் தமக்குப் புசிக்கும் புசிப்பினைக்
குறையாம லேகொ டுத்து
நீடாழி யுலகங்கள் யாவையும் நேயமாய்
நின்னுதர பந்தி பூக்கும்
நின்மலி! அகிலங்களுக்(கு) அன்னை என்றோதும்;
நீலியென்(று) ஓது வாரோ?
ஆடாத நான்மறையின் வேள்வியால் ஓங்குபுகழ்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 5

பல்குஞ் சரந்தொட் டெறும்புகடை யானதொரு
பல்லுயிர்க் குங்கல் விடைப்
பட்டதே ரைக்கும்அன் றுற்பவித் திடுகருப்
பையுறு சீவ னுக்கும்
மல்குஞ் சராசரப் பொருளுக்கும் இமையாத
வானவர் குழாத்தி னுக்கும்
மற்றுமொரு மூவர்க்கு மியாவர்க்கும் அவரவர்
மனச்சலிப் பில்லா மலே
நல்குந் தொழிற்பெருமை உண்டா யிருந்துமிகு
நவநிதி உனக்கி ருந்தும்
நானொருவன் வறுமையிற் சிறியனா னல்அந்
நகைப்புனக் கேஅல்ல வோ?
அல்கலந் தும்பர்நா டளவெடுக் குஞ்சோலை
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 6

நீடுல கங்களுக்(கு) ஆதரவாய் நின்று
நித்தமாய் முத்தி வடிவாய்
நியமமுடன் முப்பத் திரண்டறம் வளர்க்கின்ற
நீமனை வியாய்இ ருந்தும்

வீடுவீ டுகடோறும் ஓடிப் புகுந்துகால்
வேசற்(று) இலச்சை யும்போய்
வெண்டுகில் அரைக்கணிய விதியற்று நிர்வாண
வேடமுங் கொண்டு கைக்கோர்
ஓடேந்தி நாடெங்கும் உள்ளந் தளர்ந்துநின்(று)
உன்மத்த ஞகி அம்மா!
உன்கணவன் எங்கெங்கும் ஐயம்புகுந் தேங்கி
உழல்கின்ற தேது சொல்வாய்,
ஆடுகொடி மாடமிசை மாதர்விளை யாடிவரும்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 7

ஞானந் தழைத்துன் சொரூபத்தை அறிகின்ற
நல்லோர் இடத்தி னிற்போய்
நடுவினி லிருந்துவந் தடிமையும் பூண்டவர்
நவிற்றும் உபதேச முட்கொண்டு
ஈனந்தனைத் தள்ளி எனதுநா னெனுமானம்
இல்லா மலேது ரத்தி
இந்திரிய வாயில்களை இறுகப்பு தைத்துநெஞ்(சு)
இருளற விளக்கேற் றியே
ஆனந்த மானவிழி அன்னமே! உன்னைஎன்
அகத்தா மரைப்போ திலே
வைத்துவே றேகலை யற்றுமே லுற்றபர
வசமாகி அழியாத தோர்
ஆனந்த வாரிதியில் ஆழ்கின்ற தென்றுகாண்;
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 8

சலதியுல கத்திற் சராசரங் களையீன்ற
தாயா கினுலெ னக்குத்
தாயல்ல வோ?யான்உன் மைந்த னன்றோ?எனது
சஞ்சலம் தீர்த்து நின்றன்
முலைசுரந் தொழுகுபா லூட்டிஎன் முகத்தைஉன்
முன்தானை யால்து டைத்து
மொழிகின்ற மழலைக் குகந்துகொண் டிளநிலா
முறுவல்இன் புற்றரு கில்யான்
குலவிளையாடல் கொண்டருண் மழைபொழிந்(து) அங்கை
கொட்டி வாவென்(று) அழைத்துக்
குஞ்சரமு கன்கந்தனுக்(கு) இளையன் என்றெனைக்
கூறினுல் ஈனம் உண்டோ?

அலைகடலி லேதோன்று மாருத அமுதமே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி அபிராமி யே! 9

கைப்போது கொண்டுன் பதப்போது தன்னில்
கணப்போதும் அர்ச்சிக் கிலேன்;
கண்போதி னுலுன் முகப்போது தன்னையான்
கண்டு தரிசனை புரிகிலேன்;
முப்போதில் ஒருபோதும் என்மனப் போதிலே
முன்னிஉன் ஆல யத்தின்
முன்போது வார்தமது பின்போத நினைகிலேன்;
மோசமே போய்உ ழன்றேன்;
மைப்போத கத்திற்கு நிகரெனப் போதெரு
மைக்கடா மீதேறி யே
மாகோர காலன் வரும்போது தமியேன்
மனங்கலங் கித்தி யங்கும்
அப்போது வந்துன் அருட்போது தந்தருள்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 10

மிகையுந் துரத்தவெம் பிணியுந் துரத்த
வெகுளி யானதுந் துரத்த
மிடியுந் துரத்தநரை திரையும் துரத்தமிகு
வேதனை களுந்து ரத்த
பகையுந் துரத்தவஞ் சனையுந் துரத்த
பசியென் பதுந்து ரத்த
பாவந் துரத்த பதிமோகந் துரத்த
பலகா ரியமுந் துரத்த
நகையுந் துரத்தஊழ் வினையுந் துரத்த
நாளுந் துரத்த வெகுவாய்
நாவரண் டோடி கால் தளர்ந்திடும் என்னை
நமனுந் துரத்து வானே?
அகிலஉல கங்குட்கும் ஆதார தெய்வமே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 11



ஸ்ரீ :



புடிப்போர் நெஞ்சத்தைப் பற்றி

மனத்தைப் பாகாய் உருகவைக்கும்

அருள் நெறி காட்டும்

# லிப்கோவின்

# புதிய வெளியீடுகள்



மேலட்டை (நன்றி : அமுதசுரபி)
திருக்கடவூர் ஸ்ரீ அபிராமி அம்மன் →

SRI ABHIRAMI ANTHATHI


Publishers :

**THE LITTLE FLOWER CO.**

MADRAS-600017  TRICHY-620002